

கோயில் ஆச்சகரிடமிருந்து புனித தீர்த்தம் பெறுகின்றார்.

அண்மையில் நேபாள நாட்டு பிரதம மந்திரி திரு. கீர்த்திநிதி பிஸ்தா அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்து ஸ்ரீ வேங்கடேஸ்வரரைத் தரிசிததார்.



ஸ்ரீ விமான வேங்கடேஸ்வரரைத் தரிசிககினறார்.



இறைவனின மகாபிரஸாதத்தை தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவரிடமிருந்து பெறுகின்றார்.



*அடியோ மோடும் நின்னோடும்*
*பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு*
*வடிவாய் நின்வல மார்பினில்*
*வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு*
வடிவார் சோதி வலத்துறையும்
சுடர்ஆழியும் பல்லாண்டு
*படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்ச*
*சன்னியமும் பல்லாண்டே.*

—பெரியாழ்வார்.




# ஸப்தகிரி



மலர்: 9 ஜுன் 1978 இதழ் 1

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ: 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு,
ஐ. ஏ. எஸ்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம் ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப்படம்: ஸ்ரீபத்மாவதி அம்மையார் கோயிலின் தெப்போற்சவம்-திருச்சானூர்.

# ஆசிரியர் உரை

''உறங்குவது போலுஞ் சாக்காடு; உறங்கி விழிப்பது போலும் பிறப்பு'' என்று ஈரடிகளில வள்ளுவன் யாக்கை நிலையாமையைக கூறிப் போநதான். இவ்வுண்மையை மனிதன் அறிந்தும், அதனை மறந்து (அதனை மறக்கத்தான் எண்ணியோ) தன் வாழ்நாளில உள்ளத்தாலும உடலாலும கெட்டு இளமையில மூப்படைந்து மடிகின்றான். உண்டு உறஙகுவதுமே தன் வாழ்க்கையின் முழு நேரமாகக் கொண்டு, நான் எனது எனற அகந்தையுடன, புகழ் என்ற பேய்க்கு அடிமையாகி, பொறாமை, கோபம், காமம, ஆசை ஆகியவற்றிற்குப் பலியாகி பாவத்தின் பிறப்பிடமாக மனிதன் விளங்கு கின்றான. தன பிறவியின நோக்கத்தை அறிந்து கொள்ளாது சிற்றின்பங்களில் திளைதது மனிதன அழிவதற்குக் காரணம அவன தன் மனதை அடககுவதிலலை இலலை, இல்லை. அடகக முயலுவதில்லை. பேசாமல் இருக்க வாயை மூடிககொண்டு விடலாம் காணாது இருககக் கணகளை இறுக மூடிககொளளலாம் ஆனால் நினைககாமல் இருக்க மனதை கட்டுப்படுத்துவது என்பது அவ்வளவு எளிதான சாதனமன்று ஆனால் மடிவதற்குள் மனதை அடக்குதல் வேண்டும. இல்லாவிடின் மறுபடியும் பிறப்புத்தான்.

குழந்தையாக இருககும்போது மனிதனுடைய ஆசைகள், தேவைகள் மற்றவர்களால தீர்த்து வைககப்படுகின்றன. ஏனெனின அப்போதைய ஆசைகள கட்டுப்பாடுடையனவாகவும, தேவைகள் நியாயமானவைகளாகவும் விளஙகுவன. ஆனால் மனிதன் வளர்ந்த நிலையில்தான், தன்னுடைய ஆசைகள விருப்பஙகள் அவ்வளவு எளிதாக, விரைவாக நிறைவேறுவ திலலை என்பதை அறிகின்றான். ஆமாம், அவனுடைய ஆசைகள் பேராசைகளாகவும், தேவைகள் மற்றவர்களுடைய அழிவின் மேல நிறைவேறபபடுபவையாகவும் விளங்குவதால தன எதிர்பார்ப்புககளில ஏமாற்றங்களை எதிர் கொள்ளு கின்றான் இதன் விளைவாக வெறுப்பு, கோபம் போன்றவற்றிற்கு ஆளாகி தன் வாழக்கையைப பாலைவனமாக்கிக கொள்ளுகின்றான். அப்பாலைவனததைச் சோலைவன மாககுவதாகக் கருதி, சிற்றின்பக் கேளிக்கைகளில் ஈடுபட்டு, இறுதி யில அவறறுலும் அமைதி பெறுமல், தன் ஆசைகளுக்கு முடிவானதொரு முடிவைக் கொடுக்க முடியாமல் அவதியுறு கின்றான். இவ்வவதிகளிலிருந்து விடுபெறும வகையில் அத்துன்பங்களுக்குக் காரணமாக அம்மனதினை அடககவே நம் முன்னோர்கள் நமககு 'யோகம்' என்கிற ஒரு வழிமுறையை வகுத்துச சென்றனர்.

''உளன கண்டாய் உள்ளுவார் உளளத்து, உள்ளத் தேவை நெஞ்சே உணர் உட்கலந்தாருக்கு ஓர் அமுதே'' என்ற திருவாய்மொழி கூறறுப்படி, உள்ளததுறையும் இறைவனை அறிந்து தெளிந்து, அவனுடன் நம்மை இணைத்துக் கொள்ளுதலே இப்பிறவியின நோக்கமாகும். உடல், உயிர், மனம, உளளம் அனைத்திலும் இறை ஒளியைச் செலுத்தி மனித வாழ்வைச சுத்தப்படுத்திச சமத்துவச் சுடர் வாழ்வாக்குவதே நமது இலட்சியமாக இருத்தல் வேண்டும். அப்போது தான பல பிரச்சனைகளால் அலைக கழிககப்பட்டு அல்லலுறும் மனிதன மனயமைதி அடையப் பெற்று அவன் வாழ்வு ஓர் தெளிநத நீரோடையாக விளங்கும். இதற்கு வழி வகுப்பது, நம்மையும நம்முள உறையும் இறைவனையும் ஒன்றிணைக்கச் செய்யும் யோகம எனும் சாதனமாகும. ஆணவமலத்தை அழித்து, பொறாமையை ஒழித்து, புறந்திரியும் மனத்தை ஒடுககி இறைச்சிநதனையைப்பெற யோகம உதவி புரிகின்றது. யோகம எனின் அது ஞானியர்க்கே உரியது என்று பலர் தவறாகக் கருதுகின்றனர். அது வாழ்வையும் உலகையும் வெறுததோடும் வறட்டுத் துறவற நெறியன்று பரம்பொருள் பற்றிய உணர்வை உளளும் புறமும் பொருததி, அன்பும் அருளும் அமைதியும் அழகும் இன்பமும் கூடிய பூரண வாழ்வு பற்றியதே யோகமாகும. ''யோகியானவன் மிகுந்த புலனநுகர்ச்சி, கடுந்தவம் என்னும் இரண்டு தீவிரஙகளையும் விலக்க வேணடும அவன் பட்டினி இருததல கூடாது. தன உடலைத துன்புறுத்தல் கூடாது. அப்படிச் செய்பவன் யோகியாக மாட்டான'' என்று கீதை மொழிகின்றது ஆகவே மனிதனின் சிந்தனையையும் செயலையும் தூய்மையுடன் விளங்கச் செய்து, இறைவனைப்பற்றிய பேருண்மை உணர்வில் அவனைத நினைககச் செய்து தன்னையும் தான வாழும சமுதாயத்தையும் உய்வடையச் செய்யவே யோகம் துணைபுரிகின்றது ஆம சன்மார்க்கத் தத்துவத்தின் பெருமையை யோகம் உணர்த்து கின்றது. உடலையும உளளத்தையும், ஆன்மாவுள உறையும இறைஉணர்வுடன் ஒன்றித்துவிட்டால் நற்சிந்தனைகள் பெருகும; நற்செயல்கள்உருவாகும. ஆகவே நாளதோறும ஒரு மணி நேரமாவது நம் மனதை அடககி நம் சிந்தனையை ஒரு முகப்படுததி உள்ளத்தில உறையும இறைவனை நினைந்து நற்கதி பெறுவோமாக!



எல்லாவுயிர்க்கும் இறைவன் ஒருவனே
எல்லாவுடலும இறைவனாலயமே
எலலாருக்கும் இயல்பாம் இன்பம
எல்லார் வாழவும இறைவன் யோகமே. —சுததானந்த பாரதியார்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**6-4-78 அன்று திருப்பதியில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

ஆந்திரப் பிரதேசம் சித்தூர் மாவட்டம் பலமனேர் தாலுக்காவில் மாகேந்திரம் கிராமத்தில் தி. தி. தேவஸ்தானத்திற்குச் சொந்தமான 1.40 ஏக்கர் பரப்புள்ள நிலத்தை விற்றுவிடுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திரப் பிரதேசம் விசாகப்பட்டினம் மாவட்டத்தைச் சார்ந்த அனகாபல்லி, எஸ். கோட்டா, விஜயநகரம் ஆகிய தாலுக்கா தலை நகரங்களில் இலவசமாக மனை கிடைககுமாயின், அங்குக் கட்டப்படவிருக்கும் திருமண மண்டபங்களுக்காகும் செலவில் (ரூ. 3 இலட்சம்) பாதியை தேவஸ்தானம் ஏற்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருமலையில் கருடாத்ரி நகர் போக்குவரத்து வளையத்திலிருந்து நவீன உணவு விடுதி கட்டடம் வரை பாதரஸ மின் விளக்குகளைப் பொருத்தக் குழு ரூ. 1,18,000 ஒதுக்கியுள்ளது.

திருப்பதி இரயில்வே மேம்பாலத்திலிருந்து கபிலதீர்த்தம் வரை நேர் சாலை ஒன்று அமைகக குழு ரூ. 16,40,262 ஒதுக்கியுள்ளது.

திருபபதியில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கல்லூரியின் விடுதி கடடடத்திற்காக குழு ரூ. 13 இலட்சம் வழங்க முடிவு செய்துளளது.

திருமலையில சதஸ அரஙகின கூரை பன்மீது வானிலைக் காப்பமைவு (Weather-Proof) முறையினை மேற்கொள்ளுதற்கு குழு ரூ. 31,629.30 ஒதுக்கியுள்ளது.

முன்னாள் சென்னை மாநில முதலமைச்சர் பொப்பிலி ராஜா திரு. எஸ். ஆர். கே. ரங்கா ராவ் அவர்களுடைய மறைவுக்கும், முன்னாள் பீஹார் மாநில ஆளுநர் திரு. எம். அனந்தசயனம் ஐயங்கார் அவர்களுடைய மறைவுக்கும் கூட்டம் அனுதாபம் தெரிவித்துக் கொள்ளும் வகையில் குழுவினுல் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கீழ்வரும் நபர்கள், தி. தி. தேவஸ்தான கல்வி நிறுவனங்களின் செயற் குழுவில் உறுப்பினர்களாக ஏற்கப்பட்டுள்ளனர்.

1. பேராசிரியர் டி.எல். நாராயணு,
2. ,, வி. எம். ரெட்டி (ஸ்ரீவேங்கடேஸ்வரா பல்கலைக் கழகம்)
3. மாவட்ட கல்வி அலுவலர், சித்தூர் (அரசு தரப்பு)
4. திருவாளாகள் பொப்ப சத்ய நாராயணு, 5. வி. என். கௌத், 6. ஜி. சந்திரசேகர நாயுடு, 7. தி.தி.தே. பொறுப்பாணமைக் குழுத் தலைவர்.

(தேவஸ்தான பொறுப்பாணமைக் குழுச் சார்பில்)

8. செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம்
9. திரு. பி. ராம சுப்பா ரெட்டி முதல்வர், ஸ்ரீவேங்கடேஸ்வரா கலைக் கல்லூரி, திருப்பதி
10. எஸ். நாகய்யா, முதல்வர், ஸ்ரீ கோவிந்த ராஜ சுவாமி கல்லூரி, திருப்பதி
11. தி. தி. தேவஸ்தான கல்வி அலுவலர்.

தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் 1978-79 ஆண்டு நடைபெற இருககும் கீழ்வரும் விளையாட்டுப் போட்டிகளுக்குக் குழு ரூ. 78,450 ஒதுக்கியுள்ளது. ஹாக்கி (ரூ. 19,000); கால் பந்து (ரூ. 18,600); கூடைப்பந்து (ரூ. 14,250); உந்துப்பந்தாட்டம் (ரூ. 16,100); பூப்பந்தாட்டம் (மகளிர்) (ரூ. 5,500); தி. தி. தேவஸ்தான வருடாந்திர விளையாட்டுப் போட்டிகள் (ரூ. 5,000).

திருமலையில் 'நன்கொடையின்கீழ் குடில்கள் கட்டுங்கள்' என்ற திட்டத்தின்கீழ், சங்கு மிட்டா காட்டேஜஸ் அருகில் ரூ. 2.5 இலட்சம் செலவில நவீன குடில்களைக்கட்டுதற்கு சென்னை 'மெக்னெய்ல் மேகார்' நிறுவனத்திற்கு குழு அனுமதியளித்துள்ளது. இக் குடில்கள் 6 மாத காலத்திற்குள் கட்டி முடிக்கப்பட்டு, பின்னர் தேவஸ்தானத்திற்கு ஒப்படைக்கப்படும்.

தி. தி. தேவஸ்தானத்தாரால் கட்டப்பட்டுளள எல்லா கீதா மந்திரங்களுக்கும், தி. தி. தே. செயலாட்சித் தலைவரின் ஒப்புதலுக்குப் பிறகு, ஒலிப்பெருக்கி கருவிகளை வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

அலுவலக சம்பந்தமாக திருமலைக்கு வரும் தேவஸதான அலுவலர்கள தங்குவதற்கென ஜி. என். சி. அருகிலுள்ள தி. தி. தே. ரெவின்யூ விருந்தினர் விடுதியின் அறைத்தொகுதிகள் ஒதுக்கப்பட்டுள்ளன. ஆனுல் பெரும் பாலும் இவை காலியாகவே இருப்பதால், இவற்றை யாத்திரிகர்களுக்கு வாடகைக்கு விடுவதென்று குழு தீர்மானித்துளளது.

பெரிய அறைத் தொகுதிக்கு (நாள் ஒன்றிற்கு) ரூ. 10.

சிறிய அறைத் தொகுதிக்கு (நாள் ஒன்றிற்கு) ரூ. 5.

தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் சொந்தமாக வீடுகள் கட்டிக்கொளளும் வகையில், திருப்பதி அருகே உள்ள முத்யாலுரெட்டிபல்லிக் கருகில் உள்ள காலி மனைகளை ஏக்கர் ரூ. 3000 என்று குறைந்த விலையில, ஸ்ரீ வேங்கடேஸவரா தி. தி. தேவஸ்தான கூட்டுறவு வீட்டுக்கட்டடச் சங்கத்திற்கு விற்பதென்று குழு தீர்மானித்துளளது.



# பிரார்த்தனை

திரு எஸ். என். விஜயராகவன்,
திருப்பதி.





பிரார்த்தனை என்ற சொல்லைக் கேட்கும்போது எவரும் திருப்பதி வெங்கடாசலபதியைதான் நினைத்துக் கொள்வார்கள். இவை இன்று நேற்று ஏற்பட்டவையல்ல. பல ஆயிரக்கணக்கான வருஷங்களாக தொடர்ந்து நாளுககு நாள் அபிவிருத்தி அடைந்ததாகும். பிரஹ்லாதன், துருவன், மார்க்கண்டேயன, விபீஷணன், திரௌபதி மற்றும ரிஷிகள், ஆழ்வாாகள ஆசாரியர்கள பிரார்த்தனை மூலம் பெரும பயனை அடைந்ததை நாம் பல புராணங்கள் மூலமாவும பெரியவாகள மூலமாகவும கேட்டு நாமும் அநத வழியை பின்பறற ஆசைப்படுகிறோம். நமக்கு அந்த எணணம் நிறைவேற தயா மூர்த்தியாய் காத்துக் கொண்டிருககிறுன வட வேங்கடத்தான் தொன்று தொட்டு திருப்பதி வெஙகடாசலபதிக்குச் செயயும் பிரார்ததனை விசேஷங்களைப்பறறி கவனிப்போம். நகரஙகளிலும்சரி கிராமப்புறங்களிலும சரி விட்டில் குழந்தைகளுக்கோ அல்லது பெரியவர்களுக்கோ உடல நலம சரி இலலாமல் இருந்து மருத்துவா அளிதத சிகிச்சையும் பலன் அளிககாமல ஆபத்தான கட்டம் ஏற படும்போது ஊரில உள்ள பெரியவா கள் ''கவலைப்படாதீர்கள் திருபபதி வெங்கடாசலபதியை நினைத்து சிறு துணியை மஞ்சள நீரில் நினைதது அதில காலணாவை வைத்து முடிபோடடு கையில கட்டுங்கள். உடல்நலம தேறியவுடன திருபபதிக்குச் சென்று ஸ்வாமியைத் தரிசிப்பதாய் பிரார்த்தனைச் செய்து கொள்ளுஙகள்'' என பார்கள. பெரியவர் சொன்னதை உடனடியாகச் செய்து வீட்டில் உள்ள வெங்கடாசலபதி படத்தைப் பார்தது நமஸ்கரிப்பார்கள். என்ன ஆச்சரியம். படிப்படியாக வியாதி குறைந்து உடல் நலம தேறிவிடும. உடனே திருப்பதி புறப்பட்டுவந்து ஸ்வாமியைத் தரிசித்து கையில் கட்டிய காலணாவை உண்டியில சேர்த்துவிடுவார்கள்.

மற்றொரு பிரார்த்தனையைக் கவனிப்போம். உடல் நலம சரியிலலாத குழந்தை உடல் நலம தேறவும, தேர்வில் தேர்ச்சி பெறவும், வேலைகிடைபபதற்கும், வியாபாரம் லாபத்தில் நடக்கவும நினைத்த காரியம நிறைவேறவும மொட்டை அடிதது்க கொளவதாக பிரார்த்தனை செயது கொளளுகிறார்கள். இந்தப் பிரார்த்தனையைச் சிறு பெணகள் முதல் வயதான பெண்கள் வரை பலர் மேற்கொணடு, மொட்டை அடித்துக கொள்வதைப் பார்க்கிறோம் முதல் வயது பூர்த்தியாகாத குழந்தைக்குக் கூட மொட்டை அடித்து அதிகாலையில ஸ்வாமி புஷகரணியில குளிர்நத நீரில் நீராட்டுவதை பார்க்கும்போது வெங்கடாசலபதியின் சக்தி வியக்கததக்கதாய் இருககிறது. சரீரத்தில் அழகு சாதனமாக, பெணகளும சரி ஆணகளும்சரி சிகைக்குதான்முதலிடம் கொடுபபார்கள். 'நான் உயர்ந்த பொருளாய் நினைக்கும் என தலைமுடியை உனக்கு காணிக்கையாகக் கொடுத்துவிடுகிறேன். என் பிரார்த்தனையை நிறைவேற்று கோவிந்தா' என்று பிரார்த்தனை செய்து நாள் ஒன்றுககு ஆயிரக்கணககில் மொட்டை அடித்துக் கொள்ளும் காட்சியை இன்றும் திருமலையில் பார்க்கிறோம். வெங்கடாசலபதிக்குச் செலுத்திக் கொளளும் பிரார்த்தனை எத்தனை விதம் என்பதைக கவனிப்போம்.



பிரார்த்தனையில விசேஷமான பிரார்த்தனை அங்கபிரதக்ஷணம் இநதப் பிரார்த்தனை ஏழை எளிய வருக்கு சிரமம் இல்லாத பிரார்த்தனை. அதிகாலையில ஸவாமி புஷ்கரணியில நீராடி நனைநத ஆடைகளுடன் சிரசு முதல கால பாதம வரை பூமி ஸ்பரி ஸம் படும்படி படுத்து கோவிலுக் குள விமான பிரதக்ஷணத்தில 'கோவிநதா! கோவிந்தா!' எனறு உருண்டு வலம் வருவாாகள. இன்றும் பல ஊாகளில வீதியில் மஞசள் ஆடை தரித்து கையில் உணடியுடன வீதியில் படுத்து கோவிநதா! கோவிந்தா! என்று உருணடுவருவதையும் பார்க் கிறோம். கோடை சூரிய வெப் பத்தில் அவாகள சிறிதும் சிரமம் தெரி யாமல் வீதியில உருணடு வரும்போது திருப்பதி ஸ்ரீனிவாஸனுடைய கருணை

மற்றுமொரு பிரார்த்தனையைக் கவ னிப்போம். துலாபாரம் என்று எடைககு எடை சமமாக துளசி, வெலலம, கறகணடு. நாணயம், வெளளி இம்மாதிரி அவரவாகள் வச திககுத தக்கபடி பிரார்ததிததுக கொள்வாாகள். மகப்பேறு இலலா தவாகளே அதிகமாக இப்பிரார்த்தனை களைச் செயபவாகளாகும. அவர்கள தம் பிரார்ததனைகளில், 'ஸ்ரீநிவாசா' புதர பாகயம் கிடைத்தால் அந்தக குழநதைககுத தக்க எடைககு எடை மேற குறிப்பிட்ட பொருட்களை காணிககையாகச் சமாப்பிக்கிறேன்' எனறு பிரார்ததனைச் செயது கொள் வாாகள். இப் பிரார்த்தனைகளைச் செயபவாகள, குழந்தைககு ஒரு வயது ஆனவுடன தஙகள் வசதிககேறறவாறு வநது கோவிலுக்குள் ஸவாமி உணடி



நமககு நனகு புலப்படும். திருப பதிக்கு வர இயலாதவர்கள் வீதியில் உருண்டு வரும் பக்தன் கையில் இருக கும உணடியில் காணிக்கை சேர்ப்பார் கள. அநதப் பணத்தை அப்படியே திருப்பதிக்கு கொண்டுவந்து உணடியில் சேர்ப்பதைப் பார்க்கிறோம்.

யின் அருகிலுள்ள திராசில குழந தையை அமரவைதது குழநதையின் எடைக்கு, மேலேகுறிப்பிட்ட பொருட் களில் ஏதாவது ஒன்றை வைதது ஏழுமலையானுககுச் செலுத்தி மகிழ் வாாகள.

மேலும் எவ்விதமான பிரார்த் தனை பாருங்கள். அதாவது வாய்ப் பூட்டு எனற பிரார்த்தனையைச் சறறு நோககுவோம். தன ஊரிலிருநது திருப்பதி வநது வெங்கடாசலபதியை தரிசிககும வரை நீர கூட அருநதுவ திலலை என்று சங்கல்பிததுக் கொணடு முகத்தில் தவடையில ஒரு பக்கம் வெளளிக கம்பியால் குததி வாயின உள வழியால மறு பக்க தவடையின் மூலம வெளியில கமபியை கொணடு வநது இரணடு பகக நுனியை ஒனறுச சோத்து முடுககிவிடுவார்கள் திருப் பதி வந்து சுவாமியைத் தரிசிததப் பிறகு வெள்ளிக் கமபியைக் கழற்றி உணடியில் செலுததிவிடடு பிறகுதான் உணவுஉணபார்கள. எவ்வளவு கடின மான பிரார்த்தனை. நம் காலில் சிறிய முள தைத்துவிட்டால் நாம் எவவளவு அல்லல் படுகிறோம. வாய்ப்பூட்டுடன கோவிநதா என்று சொல்லிவரும பக்தனைப் பார்க்குமபோது வெங்கடா சலபதியின் கருணை அளவு கடந்தது என்பது தெரியவரும். தற்சமயம் வாகன வசதி ஏறபட்டு பல வசதிகள இருப்பதால் குறிப்பிட்ட காலத்திற் குள் வநது சேர்நதுவிடலாம். வாகன வசதி இல்லாத காலத்தில் இநதப் பிரார்ததனையைச் செய்து முடிக்க எவ் வளவு காலமாகும் என்பதை நாம் நினைததுப் பாாக்க வேண்டும்

மாவு விளககு என்ற ஒரு பிரார்த தனையும உணடு. இந்தப் பிரார்த் தனையைச சுமஙகலிகளே அதிகமாகச செய்கிறாாகள. ஒரு தட்டில் நல்ல சுததமான அரிசி மாவுடன அதற்குத தகுந்த வெலலத்தையும பொடி செய்து கலந்து நடுவில்சிறிதாக இடம் வைத்து அதில் பசுவின் நெயயை சிறி தளவு சேர்த்து வததி நூலை திரியாக அதில் வைத்து விளக்காக ஏற்றிவிடு கிறார்கள். அநத மாவு விளக்கு எரியும போது தன் கணவருககு ஆயுள க்ஷேமத்தையும், தனககுப பிறநத சந்ததிககு க்ஷேமததையும் கொடுக குமபடி வேங்கடவனை பிரார்த்தித்துக கொள்வார்கள். இநதப் பிரார்த்தனை யைப்புரட்டாசி மாதத சனிக்கிழமை

களில்தான் அதிகம் செய்வார்கள். திருப்பதிக்கு வர இயலாதவர்கள் தங்கள்இடத்திலிருநதே இந்த பிரார்த்தனையை செய்து முடிப்பாாகள. பிறகு தன் வீட்டிலுள்ள உறவினாகளுக்கும் நணபர்களுக்கும விருந்து வைத்து வெங்கடாசலபதி பிரஸாதமாக மேறபடி மாவை விருநதில் பரிமாறுவார்கள

அடுததப் பிரார்தததனை—உடலில ஏதாவது ஒரு பாகத்தில் வலி ஏற்ப்ட்டு குறையும தருணத்தில் அந்த அங்க பாகத்தைப்போல வெள்ளியால் செய்துஅதை உண்டியில சோககிறேன் எனபதாகும். மற்றும் சிலர் பொன்னுல்கூட செய்து தன்னுடைய பிராாததனையை நிறைவேற்றிக் கொளவர்.

மேலும 'கோவிந்தா' நான் நினைததது முடிந்தால் உனக்கு திருககலயாண உற்சவம் நடத்திவைககிறேன், பிரம்மோறசவம் செய்துவைக்கிறேன. நீ குளிர என் பிரார்த்தனையை ஈடேறச் செய்ய உனக்கு ஸஹஸ்ரகலசாபிஷேகம் செய்து வைக்கிறேன், வஸந்தோற்சவம் செய்துவைககிறேன். உனக்கு கருட சேர்வை செய்து வைக்கிறேன். அர்ச்சனை செய்துவைக்கிறேன. விசேஷ தளிகையை உனக்கு அமுது செயது படைக்கிறேன்' எனறு பலவிதமாக பிரார்த்தனைகள் செய்து கொள்வதையும் நாம் பார்க்கிறோம்.

பாரத நாட்டில் பல புணணியத் தலங்கள இருநதாலும் பிரார்த்தனைகளைப் பலவிதமாகச் செலுத்துவது திருப்பதி வெங்கடாசலபதிக்குத்தான் என்று சொல்லவேணடும.

திருவேங்கடவன் கருணையைப்பற்றி மேலும் இஙகு கூறப்பகிறது.

''கூனினறு போனவன் தான் நிமிர்ந
தோட குருடன் கொம்பில்
தேன் என்று காட்ட முடவன் குடம்
கொணடு தேன் பிழியத்
தாவ நின்ற ஊமை தனக்கென்று
கேட்ட தருவாா வரம்
வானின்று சோலை புடை சூழ் வட
மலை மாயவரே''

என்று பல ஆண்டுகளுக்கு முன்னமே ஒரு பெரியவர் பாடியுளளார்.

அதாவது வசதியறற கூனனும கால் ஊனமான முடவனும் கண தெரியாத குருடனும், பேச முடியாத ஊமையும் ஆக நான்கு பேர்களும ஒன்றாக சேர்ந்து திருப்பதி மலைக்கு வந்தாா கள். அங்கு யாத்திரிகர்கள் பலா வருவதால் பிச்சை எடுத்து பிழைக்கலாம என்ற எண்ணத்துடன் தங்கள் ஊரைவிட்டு திருப்பதி வந்து மலை ஏறினார்கள். மலையை ஏறும்போதே நிமிாந்து நடகக சக்தியில்லாதவன் தன கையிலிருந்த ஊன்றுகோல் தடியை வீசி எறிநதுவிட்டு ஓடினானும். கண் தெரியாத குருடன, கூனன் ஓடுவதைப் பார்தது ''ஓ' அந்த மரத்தில் தேன் இருககிறது அதை எடுத்து புசிகக ஓடுகிறான்'' என்றானும. உடனே கால் இல்லாத முடவன் வேகமாக மரததில் ஏறி தேனைப் பிழிந்து எடுத்தானும். அவர்களுடன் வந்த பேச முடியா ஊமையோ வாய் திறந்து தனக்கும் தேன் வேண்டும் என்று கேட்டானும். திருப்பதி மலையேறிய எளியவர்மீது திருவேங்கடத்தான் கருணை எப்படி இருக்கிறதெனறு பாருங்கள். சுவாமி தேசிகன் க்ஷேத்திரங்கள் பலவற்றில்பலவிதமாக அனுபவித்தாலும் திருவேங்கடமுடையானின தயை என்று இரணடு எழுததை வைத்து 108 ஸலோகங்களைக் கொண்ட தயா சதகம இயற்றியுள்ளார். தயாசதகம் 37வது ஸலோகத்தில்,

''விருஷகிரிஸவிதேஷு வ்யாஜதோ
வாஸ பாஜாம்
துரித கலுஷிதானும தூயமானு
தயேத்வம
கரணவிலய காலே காநதிசீக
ஸ்ம்ருதீனும
ஸ்மரயஸி பஹுலீலம் மாதவம்
ஸாவதானு ||''

என்று அனுபவிக்கிறார். திருப்பதி மலைக்குச்சென்று பெருமாளைச் சேவிக்க முடியாவிடில்கூட திருமலையின் அடிவாரத்தில் எத்திசையில் இருநதாலும் விருஷகிரி காற்று நம்மீது பட்டாலே போதும் நம்மை உயர்ந்த ஸ்தானத்தில் ஏறறிவிடுகிறான தயாநிதியான ஸ்ரீனிவாஸன் என்கிறார். ★

## சந்தாதாரர்களுக்கு...

31-7-78 ஆம் தேதியுடன் சநதாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எணகள் கீழே கொடுககப்பட்டுள்ளன. ஆகவே அவவெண்கள் உடைய சந்தாதாரர்கள தங்கள சந்தா எணகளைக குறிததுக கொண்டு தாங்கள செலுத்த வேணடிய தொகையைச செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பிததுக் கொளளவும் T

*90, 111, 228, 241, 414, 421, 422, 527, 618, 664, 812, 820, 863, 1114, 1246, 1247, 1250, 1254, 1256, 1257, 1267, 1272, 1274, 1279, 1282, 1284, 1285, 1287, 1292, 1295, 1296, 1301, 1306, 1308, 1312, 1317, 1318, 1320, 1321, 1322, 1324, 1330, 1334, 1985, 1986, 1987, 1988, 1989, 1990, 1991, 1993, 1994, 1995, 1996, 1997, 1998, 1999, 2000, 2001, 2002, 2003, 2004, 2005, 2006, 2007, 2008, 2009, 2010, 2011, 2012, 2013, 2014, 2015, 2016, 2017, 2042, 2064, 2114.*

தொடர் கட்டுரை

# முக்கவி கண்ட காப்பியம்

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருபபதி.

## "சுந்தர காண்டம்"

(ஏபரல மாதத தொடர்சசி)

இலங்கையில ஹனுமன் கணட மாடமாளிகைகளைப்பற்றி விளக்கு கிருர் வால்மீகி. வீடுகள் எவ்வாறு கட்டப்பட வேண்டும் என்பதற்கு வால்மீகி ராமாயுணத்தில் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

**चतुश्शाला चतुर्द्वारा सर्वतो भद्रसंज्ञिता ।**
**पश्चिमद्वाररहिता मध्यावर्ता हयानना ॥**
**दक्षिणद्वाररहिता वर्धमाना धनप्रदा ।**
**प्राग्द्वाररहिता स्वस्तिकाख्या पुत्रधनप्रदा ॥**

நான்கு வாசல, நானகு அங்கணங்கள் உளள விடடிற்கு ஸர்வதோபதரா என்று பெயர். மேற்கு வாசல் இலலாமல் நடுவில் மட்டும் வட்டமாக இருப்பது ஹயானன எனறு பெயராகும் தெற்கு வாசல் இல்லாமல் இருப்பதற்கு வர்த்தமானம் என்று பெயர் பெரும. இந்த வீடு பொருளைக் கொடுக்கக் கூடியது. கிழக்கு வாசல் இல்லாததிற்கு ஸ்வஸ்திகம் என்ற பெயர். இந்த வீடு பிள்ளை, பொருள முதலியவைகளைக் கொடுக்கக்கூடியது. ஹநுமான் இலங்கையையும், அங்குள்ள வீடுகளையும பாாத்தவுடன மகிழ்சசியுணடாகி குதித்துக குதித்துச் சென்ருா. அவ்வமயம ஒவ்வொவ்வொரு வீடுகளிலும் பல நிகழச்சிகளை கண்ணுற்றுச சென்ருா. ஒரு வீட்டில், இனிமையான சங்கீதம மூனறு ஸதாயிகளிலும் வாசிப்பதைக கேட்டாா வீணையில் இராவணன ஒரு விததகில துஷடனே தவிர மற்ற எல்லா விஷயஙகளிலும் மிக தோசசி பெறறவன. இராவணன நனகு வீணைவாசிப்பான ஸாமவேதகானம செய்பவன, சிவ பூஜை செய்பவன. ஆகையால் அவனுடைய நகரில் எலலா கலைகளுககும இடம் கொடுககப்பட்டுள்ளன. மேலும அவன் வீணையையே தன கொடியில் சின்னமாக வைத்துப்போற்றுகிறவன். இதனைக் கம்பா அழகாகக் கூறுகிருர்.

"இலக்கண மரபிறகு ஏறற எழுவகை
நரமபின் நலயாழ
அலத்தகத தளிரகை நோவ அளந்து
எடுதது அமைதத பாடல
கலக்கு உற முழஙகிறறு என்று
சேடியா கனனிமாாகள்
மலாக்கையால மாடதது உமபா
மழையின வாய பொதது வாரை',

'அவ் இலங்காபுரியின மாடமாளிகைகள் மிகவுயர்நத வானத்தையளாவி நிற்றலால் அவற்றின உபரிகைகளில் மேகஙகள் தஙகி இடி முழஙகுகினறன அம்முழககம், அம்மாடஙகளிலிருந்து மாதாகள நூலமுறை தவருமல அருமையாய வீணை வாசிக்கின்ற இசைப் பாட்டிறகுத் தடையாகின்றதென்பது பறறி அஞ்சி அம்மேகங்களின வாயை அம்மாளிகைகளில பணிப் பெணகளாயமைந்துள்ள இளமகளிர் விரைந்து சென்று தமது மெல்லிய கைகளால் மூடுகின்றனா.'

"त्रिस्थान स्वरभूषितम्" என்று கூறுகிறா வாலமீகி. மூன்று ஸ்தானங்களாவன. மந்தர, மத்ய, தாரம் முதலியவைகள். இம்மூன்று ஸதாயிகளும நம உடலிலிருந்து மாா்பு, கழுத்து, தலை முதலான இடங்களிலிருநது உணடாகின்றன. இந்தக் கருத்தை ஸ்ரீ தியாக ராஜஸ்வாமிகள தன கிருதிகளில் கூறியுள்ளாா. ஸ்வரங்கள ஏழு. அவைகள ஷட்ஜம, ரிஷபம், காநதாரம், மதயமம், பஞசமம், தைவதம், நிஷாதம் முதலியவைகள். "சோபில்லு ஸப்த ஸவர" எனற கிருதியில் "நாபீஹ்ருத் கணட, ரஸன, நாஸாதுல" என்ற அடியால் தெரியப் படுத்துகிறா. தமிழிசையில ஏழு நரமபுகளிலிருநது ஏழு சுரங்கள் எழுப்பப்படுகினறன எனறு கூறப்படடுளளன. ஆனல அந்தக் கருத்து அவ்வளவு பொருததமானதல்ல. அவர்கள் ஏழு சுரங்களுக்கும் குரல, துத்தம், கைகிளை, உழை, இளி, விளரி, தாரம் எனற பெயர்களைக் குறிப்பிடுகிருாகள. வீணையை யாழ் என்றபெயரால அழைக்கிருர்கள். அவைபேரியாழ, மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பவையாகும். நாட்டிய அணஙகுகளும் உள்ளனர் எனபதை வாழமீகி கூறுகிருர்.

**स्त्रीणां मदसमृद्धानां दिवि चाप्सरसामिव ।**
**शुश्रावकाञ्चीनिनदं नूपुराणां च निस्वनम् ॥**

'பெணகள அப்ஸரஸ்திரீகளைப் போல் நாட்டிய மாடுகிருாகள். அவர்களின ஒட்டியாணங்களின் சலஙகைகள் ஒலியும், கால் சதஙகைகளின் ஒலியும கேட்கின்றன' என்று. இந்தக் கருததையே கம்பா வெகு அழகாகக் கூறுகிருர்.

"சந்தப் பூம் பநதா வேய்ந்த தமனிய
அரங்கில தததம
சிநதித்து உதவும் தெயவ மணி
விளக்கு ஒளிரும சேககை
வநது, ஒதது, நிருத மாககள விளம
பிதநெறி வழாமை
கந்தாபப மகளிர் ஆடும் நாடகம
காணகிருரை"

"அழகிய மலர்களாற் பநதரிட்டு அலங்கரிக்கப் பெற்ற பொன்மயமான நடனசாலையில் தாளடைவு சிறிதுந தவருமல கந்தாவமாதர் ஆடுகினற நாட்டியத்தை, சிந்தாமணியென்னும் தெய்வமணியின ஒளியில மெததென்ற படுக்கையின் மீது சாய்ந்தபடி இருநது கொண்டு பார்தது உவநது பொழுது போக்குகின்றனா அரககர் மாநதா" எனறு கூறுகிருர்.

(தொடரும்)

# எண் கணித சோதிடமும் ....

# .... அதன் பலா பலன்களும்

## பகுதி – 1

தொகவுரை .

வளர்ந்துவரும் மனித சமுதாயமும், இந்தச் சமுதாயத்தில் விஞ்ஞானக் கோட்பாடுகளும பல்கி பெருகி வரும் இந்நாளில் மனிதன் புதுமையையே விரும்பி அதனுல் கவரப்படுகிருன் என்றுகூடக் கொள்ளலாம. புதுமையை யாங்ஙனம் பெறுவது? புதுமையால் நாகரிகம அடைநது வாழ்தல எங்ஙனம்? தன்னைக கவர்சசிப் படுத்திக்கொள்ளுதல் எவ்விதம? தான் வேருெருவரிடத்தில் கவர்சசியை சமபாதிததல் எவ்வழி? தன்னைப் பிறிதொருவரிடமிருந்து தனித்துக் காட்டுதல் எப்படி? இப்படியாக அவன ஒரு புதுமையை-புரட்சியை-நவீனத்தை-விரும்பி தன்னைக்கவர்ச்சிக்குள்ளாக்கி - நாகரிக மோகத்தில் உழனறு திரியும்போதும் - நூற்றுக்கு எண்பது சதவிகிதம் பழஙகால சோதிடம், எண கணித சோதிடம் (Numerology), கைரேகை சாஸ்திரம (Palmistry), மணி சோதிடம் (Gemmology) போனறவற்றிலும் அவன் மனம் ஊடுருவித திரிகின்றது. அது ஒருவித மயக்கம் என்றுகூடக் கொள்ளலாம். எனினும் தனககுச் சாதகமான சூழ்நிலை தனது வாழ்நாளில் கிட்டாது போகையில், அவன் விதியை நொந்து கொள்கிருன். விதிக்கும் தலை எழுத்துக்கும இடையே போராடும போது அவன ஒருவித தேறுதலைப் பெறுதற்காக எத்தனிககும்போது சோதிடம் போன்ற சாஸ்திரங்கள் அவனுக்கு ஒருவித பொழுதுபோக்கும், மாற்றமும் தருவதாக நினைத்து அவைகளினபால் நாட்டம் செலுத்துகிருன.

வாழ்க்கையின்பால் பிடிப்பின்றித் தளர்வடையும்போது, சஞ்சல மடைந்த மனதின் உள்ளுணர்வுகளில் எழும் திரிபுகளை ஒருமித்து ஒருவழிப் படுத்தாது உழல்கின்றபோது, ஒரு ஆசானைத் தேடிப்போய் வழி காட்டத் தூண்டச் செய்து, நிலைப்படுத்தப்பட்ட வாழ்க்கையில் அமைதியையும் தன் னிறைவையும் பெற்றுத் தீரலாமே என்பதற்காகக்கூட ஒரு சோதிடனைக் கண்டு, ஆலோசனை பெறுகிருன். சாதகமான சூழ்நிலையில் மிதக்கும் போதும், வாழ்வினில் அமைதிப் பெற்று இன்பத்தில் திளைக்கும் போதும் பண்டிதர்களை நாடுபவர்கள் சொற்பமே. மற்றும் தீராப் பிணி, வறுமைப் பிணி, காலங்கடந்த வயதில் திருமணமின்றிக் காணும் பெண்ணைப் பற்றிய பிரச்சனை போன்றவற்றிற்காக ஆறுதல் தேடி உய்வடையமாட்டோமோ, என்பதைப் பார்க்கும் போது எத்தனை செல்வம் போனுலும் பரவாயில்லை, பிரச்சனை தீர்த்து பரிகாரம் தேடினுல். தன்யனுவேன் என்பான். ஆனுல் அளவுக்கு மீறி பொருள செலவழியுமேயன்றி அவனுடைய பிரச்சனைகளைத் தீர்த்துவைக்கும் திரிகால ஞானிகளின் வரிசையில் யாரையுமே சொல்ல முடியாது. தன்னுடைய ஜோதிடத் திறமையின்பால ஒவ்வொரு ஜோதிடருக்கும்கூட அவரவரினபால் அவ்வளவு நம்பிக்கை இல்லை போலும்! இது நூற்றுக்கு எண்பது சதவிகிதம் மெய்யாகவே தோற்றம் கொண்டு இருக்கினறது.

பொதுவாக சொல்லப் போனுல் சிருஷ்டிகர்த்தா பிரும்மா, ஆதியில் படைக்கும்போது தலையில் ஒவ்வொரு ஜீவ இராசிக்கும எழுதுகிருனே அந்த எழுத்தையும், இரண்டு கைகளின் உட்புறத்தில் உள்ளங்கைகளில் எழுதுகிருனே அநதக் கோடுகளையும், மாற்ற அவனுலேயே முடியாது. ஏதோ இறைவனுல் படைக்கப்பட்ட இரேகைகள் மாறுகின்றன என்று சொல்கிருர்களே தவிர அவைகளின் ஆதாரஸ்தானங்கள் என்றும் மாறுதல் அடைவதில்லை. ஒருவேளை வளர்ச்சியடையலாமே தவிர அவைகள் மாற்றப்படுவதில்லை. எந்த ஒரு மானிடனும், அவன் அவனுக்கென்று, அந்த ஆண்டவனுல் வகுத்து ஒதுக்கப்பட்ட கர்மாதிகளை அவனுக்கு, அவனுல் சுமத்தப்பட்ட இத்யாதிகள் எனறு அவனது ஜீவிய காலங்கள் முழுவதும் அனுபவித்துத் தீர்க்கத்தான் வேண்டும். ஆகவே சோதிடம், கைரேகை சாஸ்திரம், எண கணித சோதிடம், மணி சோதிடம் போன்றவைகளை அவன் தன் வாழ்நாட்கள் முழுதும் நம்பியிருந்து அதுபற்றியே தன்னுடைய வாழ்க்கைப் படகினை செலுத்துவானுயின் அவன் பிறவிக் கடலில் மூழ்கி மூழ்கிக கரை சேராதவனுய், மாண்டுபடுவான. 'காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்ததைப்' போல ஓரளவுக்கு சோதிடத்தை நம்பி அது

திரு E. S. குமரன், B Sc.
சேலம்.

காட்டும் பாதையில் நன்மை தீமைகளை ஆராய்நது துணிவு, நம்பிக்கை தீர்க்காலோசனை போன்றவைகளைப் பிரயோகித்துச் சீர்தூக்கிப் பார்த்து அவற்ருல் ஏற்படும் விஷயார்த்தங்களால் கலங்காது முன்னேறி கடமையைச செய்தல தலையாய கடனுகும.

எது ஒன்றையும் பெறுவதற்காக ஒருவன் எவ்வாறெல்லாம் கஷ்டப்படுகிருன் என்று நினைவு கொள்வோமாயின் அது அவனுல் இழக்கப்படும் போது அவன் மனம் எவ்வளவு தத்தளிக்கும்? இழந்த ஒன்றை பெறுவ

தற்கா அவன் செய்யும முயற்சிகள் யாவும் அவன் அதனை அடையப் பாடு படும்போது செயத முயற்சியைக் காட்டிலும் சிறிதே. அது போலத் தான் வாழ்வும்-சாதகமும-ஜாதகமும-விதியும்-விளையாட்டும் விளைப்படுத் தும. கடந்த காலத்தினைப்பற்றிச் சொல்லும சோதிடாகளை இக்காலத் தில் காண்பது சற்று அரிதான விஷயம். ஏதோ வயிறறுப் பிழைப்புக்காக சோதிடம் பார்த்துச் சொல்கிறார் களேதவிர அதில ஆழ்நத சிந்தனையைச் செலுத்தி, சோதிடத்தையும் புனிதத் தொழிலாக மதித்துப் பலன் கருதி, பயன்-பொருள கருதாது போதித்து உள்ளதை வருவதைச சீர்தூக்கிச் சொல்பவர்கள ஒரு சிலரே. ஆகவே எந்தச் சாதாரண விஷயமாயினும், அதில் சிரததையும், கவனமும செலுத்தி நம்பிக்கைக் கொண்டு செய லாற்றுவோமேயாஞல் பயனகருதாது, பலனைத் துணிநது எதிர்நோககலாம்.

### எண் கணித சோதிடமும் அதன் ஆதாரங்களும்:

"Numeralogy" என்று வழங்கும சொல்லுக்குப் பொருள் காணுகையில், 'Numer' என்ருல் Number எனறும், 'Logy' எனருல் ஒரு விஷயத்தைப் பற்றியோ ஒனறைப்பற்றியோ தீர்க்க மாக விவாதித்து அவற்ருல் ஏறபடும் விமாசனததால் எழும் மெயமையை யும பொய்யையும சுட்டிச சீர்தூக்கிப் பாரத்து நீதி வழங்கச் சொல்லுதல். ஆதலால் எண்களால் வரும விமர் சனத்தினைப்பறறிச சோதித்து சொல் லுதல் எண கணித சோதிடம் (Numeralogy) எனறு கூடச் சொல்லலாம். காலச சக்கரத்தின சுழற்சியினுல் ஏற் படும பருவ பேதங்களைக கணக்கிட்டுக கணித்தவற்றுள் பலவேறு கூற்றுக்கள் தெளிவுறுகினறன. சம இராத்திரி வருஷத்தைக் கணக்கிடும்போது பூமி சூரியனை மையமாக வைதது காலக் கணிதத்தை அமைதது இருந்தனர். பொதுவாக சூரியன பூமத்ய இரேகை யைத தாணடும நாள சமராத்திரி தினம், அதாவது விஷூ எனபபடும. வருடத்தில் இரணடு பருவங்கள சம இராததிரி தினமாக கருதப்படு கின்றன. மார்ச் 21ம செபடம்பர் 22ம இவைகளைக குறிப்பன. ஆனுல் 'சம இராததிரி வருஷக் கால முற் போக்குச் சுழற்சி' எனப்படுவது ஒவ் வொரு 25,827 ஆணடுகளுக்கு ஒரு முறை மாறுபடாத, நிலையான காலத் தினைக கணிக்க ஆதாரமாய் தோனறி விடுவதாகப் பழங்கால ஹிநதுக்கள் கண்டுபிடிததுள்ளனர். சாலமனின கூற்றுப்படி,

> "To everything there is a season
> and a time for every purpose
> under the heaven"

எனபது காலத் தச்சனுல் உருவாக் கப்படும பருவங்களில உணடாகும மாற்றங்கள் ஒரு விஷயார்த்தத் தையோ, ஒரு தெளிநத கூற்றையோ தெரிவிக்கின்றன என்பதாம்.

### பகுதி – 2

எல்லாவித சோதிட கணக்கார்த் தங்களும் பூமி (அலலது) பூமணடலத் தின நடுப்பகுதியின அமைபபுகளுக குத் தக்கவாறே அடிபபடையாககிக் காட்டபபடுகினறன. எநத தேசத் திறகும எந்த முறைகளுககும் மேற சொன்ன அமைப்பே பொதுவாக அடைப்படையால ஒன்றுபட்டிருக் கினறன. இதுவுமனறி கிரகங்களின சுழற்சிப் பயணத்தின்போது உணடா கும காலப்படியும் இநத முறை அனு சரிக்கபபடும். பூமியின் நிலையானது இராசிச் சக்கரத்தின சுழற்சியின் மையப் பகுதியாகவும, மற்றைய கிர கங்கள தங்களின மையத்தை (Orbit) தாங்களே அனுசரித்து சுறறிக கொணடும, பூமி தான சுற்றும திசை யினின்று எதிர் திசையில் தன்னுடைய கிரியையால் அவைகள் சுற்றுவதை உணரும். இராசிச சககரம பன னிரணடு கால அளவு கொணடும பூமியை ஆகர்ஷித்துக காட்டும தன்மையைக் கொணடும் இலங்குவ தால் பன்னிரண்டு இராசியில அந தநத நேரததில் பிறநத ஒல்வொரு மனிதனுக்கும அதனுல் வரும் கவர்ச சிக்கு ஆதாரமாய் இருக்கும. ஒவ் வொரு இராசிக்கும $30^\circ$ எனக்கொண டால் 12 கால அளவிற்கும்,

$$12 \times 30^\circ = 360^\circ$$

கொணடு விளங்கும். இதில் ஒவ் வொரு கால அளவும பதது டிகிரி

## அறிவிப்பு

தி. தி. தேவஸ்தான மேலாணமைக்குட்பட்ட கோயிலகளின் புதுப்பிததல் மற்றும் பழுது பார்த்தல பணிகளுககாக, தி. தி. தேவஸ் தானததிற்கு வழஙகப்படும் நனகொடைகளுக்கு, 1961-ஆம் ஆணடு வருமான வரிச் சட்டம் பிரிவு 80 ஜி (2) (b)-யினகீழ, வருமான வரி விலக்களிக்கப்படும்.

  

சமயப் பணிகளுக்கல்லாத தர்ம காரியங்களுக்குமட்டுமென தி.தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு, 1961-ஆம ஆண்டு வருமான வரிச் சட்டம, பிரிவு 80 ஜி-யின்கீழ், 31-7-1978வரை வருமான வரி விலக்களிப்படும்.

செயலாட்சித் தலைவர்
தி. தி. தேவஸதானம், திருப்பதி.

அளவாகப் பிரிக்கப்படுகையில் மூன்று பகுதிகளாககப்பட்டுள்ளன. சூரியன் இராசிச சக்கரத்தின் ஒவவொரு டிகிரியையும் கடகக ஏற்படும கால அளவு 4 நிமிடஙகள் எனக்கொண்டால

$$360 \times 4 = \frac{1440 \text{ Mts}}{60} = 24 \text{ Hrs.}$$

இவவாறு இராசிச் சக்கரததின் ஒவ்வொரு சுற்றையும சூரியன் 4 நிமிடஙகளில் படிப்படியாகப் பூர்த்தி செய்து கடக்குமபோது நாட்கள் நகருகின்றன-வாரம-மாதம-ஆகி வருடஙகளாகின்றன. விஞ்ஞானக் கூறறின் ஆக்ஞைப்படி சூரியன ஒரு பகுதியினின்று இன்னொரு இராசிப் பகுதிக்குச் செலலுகையில் ஆகும கால அளவு முப்பது நாட்கள் ஆகும. இவ்வாறே பன்னிரணடு மாதங்களுக்கும முறையே பனனிரணடு இராசிப் பகுதிகள் பூாத்தியாகின்றன. இவ்வாறே ஒரு ஆணடும் முடிவடைகின்றது.

24 பகுதிகளும் ஒவ்வொரு மணியாக்க் கணக்கிடுகையில் ஒவ்வொரு கிரகமும் சுழலும் காலம் திரும்பத் திரும்ப மூன்று முறை நிகழ்கின்றன. அவைகள் முறையே சந்திரன், புதன், வெள்ளி, சூரியன், செவ்வாய், வியாழன, சனி ஆகும். மற்ற கிரகங்களை விட மூன்று கிரகங்கள் மீதி மூன்று மணியை ஆதிக்கம் செய்கின்றன. அதாவது

$$7 \times 3 = 21 + 3 = 24 \text{ Hrs.}$$

அவைகள் சனி, வியாழன, செவ்வாய் என்று வழங்கபபடும். மேற்சொன்ன ஏழு கிரகங்களின் சுழற்சியின விஸ்தீரணததைப் பொறுத்து மேலிருந்து கீழ வரிசையில நாலாவது கிரகம் ஏனைய கிரகஙகளுககு தேவதை ஆகி ஆட்சி செலுத்தும் ஆட்சிசெய்யும் கிரகத்தில அடுத்த நாலாவது கிரகமானது மறுநாளின தேவதையாகி ஆட்சி செலுததும். இந்த முறை திரும்பத் திரும்ப சுழற்சி செயயபபடும். இதை 'Solomon Seal' வற்புறுத்தும்.

தொடர் கவிதை :

## திருவேங்கடவர் பொன்னூசல்

செந்சொற்கவி. T. S. ராஜகோபாலன-சென்னை

### அனந்தாழ்வான் முதலோர்தம் அருந்தொண்டு

நந்தவனம நிருமித்த நல்லா னேடும
மலேதம்பி யெம்பாரும் நமபி யண்ணன்
முந்துபெரு முவகையிலே மலர்கள் தூபம்
சநதமொடு புனல்கொண்டு முன்னே நிற்பச்
சந்ததமுந் தேவரிசை திசைக டோறுஞ்
சாருஞ்சீர் வேங்கடததி னுச்சி யின்பால்
உந்துவிரை மலர்த்தவிசின் கீழே யோங்க
ஒளிபரப்புந் திருமார்வர்! ஆடி ரூசல்.

### கேள்வி சீயர் இருவரது கைங்கர்யம்

முனிவரிரு பெற்றியினர் இலக்கு வன்போல்
இரவுபக லென்னுதே மூதாங் கேள்வி
தனிலமருந் தவமுடையோர் நுமககே யாகித்
தனித்தொண்டில் தாமூன்றி மதர்த்து நிற்பத்
தனியுரகத் திருவடிவில் தரணிக் காமோர்
திலதமதாம் வேங்கடத்தி னுச்சி யின்பால்
கினியவிரு நாச்சியாரும் மிருபா டேந்துங்
கிளர்பருகத் திருமார்வர்! ஆடி ரூசல்.

### கல்யாண குணங்கள்

நலனல்லா வெவ்வெவைக்கும் பகையே யாகி
நாயிற்றின் முன்பனிபோல் நைய வாகும்
நலன்மல்க மங்களமாங் குணங்கட் காமோர்
வாருணமாம் வேங்கவர்! ஆடி ரூசல்
குலமல்கு குணங்களொடும் ஞானு னந்தம்
கொழுமிமிக வடியார்க்கு மின்ப மூட்டும்
புலமல்கு பூங்குல்லைத் தாரா லோங்கும்
பொற்புடையீர்! திருமார்வர்! ஆடி ரூசல்.

### திருமேனியின் எழில்

ஐவகையா முபநிடத மயமே யாகி
அரியதிரு மேனியிலே சோதி பொங்கி
மைவரைபோல் மனங்கவர மண்டும் பததர்க்
காகுஞ்சீர் வேங்கடவர்! ஆடி ரூசல்
மொயவணமும் மாமையொடு மழவுங் கத்தம
முகிழ்தருமோ ரிலாவண்யம் கமலே தானும்
நைவணமோர் மெனமையுடன் வளரும் மேனி
நம்பெருமான்! வேஙகடவர்! ஆடி ரூசல.

(தொடரும்)

ஏழு குறிகளிட்ட சாலமன்

முத்திரை விளக்கம் ;




1-4 குறியிட்ட இலக்கு சூரியனும் புரேனஸூம் சேர்ந்து செயல்படும் அமைப்பு [ இதில் சூரியன் ஆணுகவும் பூரேனஸ் அதைச் சுற்றிவரும் பெண் கிரகமாகவும் கொள்கையில் உற்பத்தி ஸ்தம்பமாயும், ஆதமனைச் சார்ந்த அல்லது ஆன்மீகத்தினைச் சார்ந்த இலக்குவாயும், அமைந்த அமைப்பு.

2-7 குறியிட்ட இலக்கு சந்திரனும் நெப்டியூனும் சேர்நது செயல்படும் அமைப்பு [ இதில் நெப்டியூன் ஆணுகவும் சந்திரன் பெண்ணுகவும் கொணடு செயல்படுததப்பட்டிருக்கிறது. உலகு சார்ந்த ஆன்மீக ஆத்மன அமைபபு.

இப்படி மேற்படி முத்திரைச் சித்தி ரத்தை விளக்கும் தத்துவம் பின்வரு மாறு பேசப்படுகின்றது.

சூரியனிலிருந்து அவதரித்த வாழவு, ஏனைய கிரகங்களினுல் அங்கீகரிக்கப் பட்டு சனி கிரகத்தால் அழிவுறுமாம். பின்னர் அழிவுற்ற ஆத்மாவினது நிழல் (உடம்பு) அல்லது கூடு ஆத்மனை வேறுபடுத்திச் சூரியனுக்கே அனுப்பி உய்விக்கிறதாம். இப்படிப் பிறப் பிறப்புச் சுறறுக்களால் இடைவிடாது உழல்கின்ற வாழ்வானது நிறைவுற்று மீண்டும் சுழற்சி பெற்றுததீரத்தீரச் 'சாசுவதசம்' சங்கமிக்கினறது. ஆகவே சூரியன்தான் பிறப்புக்கும் இறப்புக்கும் காத்தா ஆகின்றுன். விஞ்ஞானப்படி சூரியனின் தொலே தூரம் சுமார் 8,60,000 மைல்கள (சுற்றளவு) இதுதான மற்றைய கிரகங்களைவிட நீணட எண்ணைக் கொண்டதாம்.

## ஆதாரங்களும நிரூபணங்களும் :

எண் கணித சோதிடத்தைப் பொறுத்தமட்டில் பல்வேறு மேல் நாட்டு சோதிடர்களால் எழுதப் பட்ட நூல்கள் காணப்படுகின்றன. இருப்பினும் பிரபல சோதிடர் 'ஸீரோ' என்பவரின் 'Books of Numbers' என்ற புத்தகத்தை அடிப்படை யாகக் கொண்டு எழும் ஆதாரஙகளும், உணமைகளும நிருபிக்கததககவாறு உள்ளன.

ஆன்மிகத்தின் பககம் சார்ந்து இருப்பதும், ஆனமீக, விஷயாாத்தங் களைப பற்றி பேசபபடும் விநோதமான எண 7.

ஒரு பொருளைப்பற்றிப் பேசுகை யிலோ, அலலது ஒரு ஜடத்துவமற்ற தன்மையின் உணமைக கணிப்பி லேயோ அல்லது எணகளின் கடைசி வரிசையிலோ அமைந்திருக்கும் எண 9. இது முடிவைக் குறிக்கும் இலககம்.

பிறபபுச சுழற்சியின் பாரமபரி யத்தை அடிபபடையாகக் கொணடு ஏழு தினங்களின் காலப் போககினை அடிபபடியாகக கொணடு எழுநத ஜீவித பாரம்பரிய இலக்கம 7 எனக் கொண்டால்,

எனறும், மேற்கோள் காட்டததகக ஏழு உலகம் அல்லது சொர்க்கம எனப்பட்டும்.

ஏழு மகுடங்கள் என வழஙகப் பட்டும்,

ஏழு முத்திரைகளாகியும,

ஏழு கிறித்துவப் புனிதாலயஙகளாக வும்,

ஏழு சந்ததிகளாயும், (டேவிட் முதல் கிறிஸ்து பிறப்பு வரை)

ஏழு தேவதைகளாகச் சொரூபம பெற்றும்,

ஏழு கிரகங்களின் பிரம்மாணட மான காநதத் தனமை பெறற வசீ கரச் சகதி பெறறும்,

ஏழு தேவர்களாக (இந்து மதம)த் தோன்றி நின்றும்,

மகததுவத்தை உணர்த்தி நிற்கின்றன.

(தொடரும்)

ஸபதகிரி



# கீதை காட்டும் நல்வழி

அத்தியாயம் — 9

ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

பகுதி — 8

அறிந்தோ அறியாமலோ நாம அன்றாடம் எத்தனையோ பாபகாரியங்களைச் செய்து வருகிறோம். பாபகாரியங்களைச் செய்ய மனம் நம்மை எப்படியெல்லாமோ தூண்டுகிறது. 'நல்லது செய்து செய்து எதைக் கண்டாய்? எப்படியாவது உலகில் ஆனந்தமாக வாழ வேண்டும். அவ்வளவு தான். பொய் பித்தலாட்டங்களில ஈடுபடுபவர் எத்தனை பேர் சுகபோக வாழ்வு வாழவில்லையா! பகவானிடம் பக்தி கூடக் கூட நீ படும் துன்பம் தான் கூடுகிறது. எனவே எப்படியாவது வாழ்நது இன்பத்தைப் பெருக்கிக் கொள்', என்று நமது மனத்தின் தீய பகுதி நமக்குப் போதிக்கிறது. நாமும் அத்தகைய துர் போதனைக்குச் செவி சாய்த்தால் தீயசெயல்களில் கருத்தைச் செலுத்துபவர்களாகிறோம். அதாவது தீயவர்களாகிறோம். பாபிகளாகிறோம். பாப மூட்டையின் சுமை கூடிக் கொண்டேபோகிறது. திடீரென்று ஒரு நாள் எந்த மனம் நம்மைத்தீமை செய்யத் தூண்டியதோ, அதே பாழ்த்த மனம், 'நீ இவ்வளவு பாபம் செய்திருக்கிறாயே. உனக்கு விமோசனம் உண்டா! மரணத்திற்குப் பின் உன் கதி என்னவாகும்?' என்று நம்மைக் கேட்கிறது. அப்பொழுது தான் நமது கடநத காலத்தைய வாழ்க்கையைக் கொஞ்சம் திரும்பிப் பார்க்கும் சந்தர்ப்பம் நமக்குக் கிடைக்கிறது. திரும்பிப் பார்க்கிறோம். பயம் அடைகிறோம்.

''இத்தகைய கொடியோனாகிய எனக்கு நற்கதி கிட்டுமா?'' என்று நமது மனம் நம்மையே கேட்கிறது. பதில் சொல்லத் தெரியாது நாம் திகைக்கிறோம். அப்பொழுது பகவான் கிருஷ்ணர் இளமுறுவல் பூத்தவராக நம் மனக் கண் முன் தோன்றுகிறார். அவரது அபய ஹஸ்தமும், அருள் மொழிகளும் நமக்குத் தெம்பூட்டுகின்றன. "கடந்த காலத்தைப் பற்றிக் கவலைப்படாதே! இந்த விநாடியிலிருந்து உன் மனத்தை என் பால் திருப்பு. நான் உன்னைக் காத்தருள்கிறேன்,'' என்று பகவான் வாக்குறுதி அளிக்கிறார்.

அதைக் கேட்ட பின்னரும் பக்தனின் மனத்தில் ஒரு ஐயம் எழுகிறது. "பாபியாக இருந்த நான் திருந்தி விட்டேன். பகவானின் அருளும் எனக்குக் கிட்டும் என்பதும் உண்மை தான். ஆனால் அது எப்பொழுது கிட்டும்? நான் இன்னும் எத்தனை பிறவிகளை எடுக்க வேண்டுமோ?'' என்ற ஐயம் தான் அது. அதைப் போக்கி அருளகிறார் பகவான் அடுத்த சுலோகத்தில்.

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா
சச்வச்சாந்திம் நிகச் சதி |
கௌந்தேய ப்ரதிஜானீஹி
ந மே பக்த: ப்ரணச்யதி ||

'விரைவில் அவன் தர்மாத்மாவாக ஆகிறான். நித்திய அமைதியையும் அடைகிறான். குந்தியின் மகனே, என் பக்தன் நாசமடைவதில்லையென்று என அறிந்து கொள்வாயாக.'

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை:

கண்ணப்பர் காட்டில் கொடூர வாழ்க்கை வாழ்ந்த வேடர் தான். தனது வேட்டைப் பொருளாகிய மாமிசத்தை நைவேத்தியமாக சிவனுக்கு அவர் படைத்தார். அவரது பக்தியின் மேலீட்டால் பெருமானின் அருள் அவருக்குக் கிட்டியது. அந்தப் பிறவியிலேயே அவர் சான்றோனாக மாறி பெருநிலையை அடைந்தார். கேடு அனைத்தும் அறவே நீங்கப் பெற்று நலம் அனைத்தும் அடையப் பெற்றார்.

பாண்டவர்கள் கண்ணபிரானிடம் தீராத பக்தி கொண்டவர்கள். ஆனுல் அவர்கள் பட்ட கஷ்ட நஷ்டமோ கொஞ்ச நஞ்சமல்ல. ராஜ்யத்தை இழந்தார்கள். பொன், பொருளை இழந்தார்கள். வனவாசத்தில் எத்தனை எத்தனையோ இடர்கள் எதிர்ப்பட்டன. ஆனுல் இத்தனைக் கிடையிலும் அவர்கள் ஒன்றை மட்டும் கைவிட வில்லை. அது தான், பகவானிடம் அவர்கள் கொண்டு விளங்கிய பக்தி. அனைத்தையும் இழந்த நிலையில், பகவான் கிருஷ்ணனைச் சார்ந்திருந்தது ஒன்றே அவர்களுக்குப் பெரும் துணையாக விளங்கியது. இறுதியில் அவர்கள் அனைத்தையும் பெற்றுப் பெரு நிலையை அடைந்தனர்.

குகை ஒன்றினுள் பன்னெடுங்காலம் இருள் சூழ்ந்திருந்தது. அந்த இருளைப் போக்க வெகு காலம் பிடிக்காது. ஏனெனில் அங்கே ஒரு விளக்கைக் கொண்டு சென்ற மாத்திரத்திலேயே பல காலம் அங்கிருந்த இருளானது உடனே அகன்றுவிடும். அது போல ஒரே மனதுடன் இறைவனை வழிபட ஒருவன் ஆரம்பித்தவுடனேயே அவனது மனத்தை அதுகாறும் கவ்வி யிருந்த அக்ஞான இருள் உடனே அகன்று அங்கே ஞான தீபம் ஒளிர்கிறது. அவன் எத்தகைய பாபியாக இருந்தாலும் அவன் அனைத்துப் பாபத்திலிருந்தும் விடுபட்டவனுகிருன்.

பகவானது பக்தாகளுக்கு அழிவே ஏற்படாது. அவர்கள் மிகுந்த தொல்லைகளுக்கும் துன்பங்களுக்கும் ஆளாவது போன்று தென்படலாம். ஆனுலும் இறுதியில் அவர்களுக்கு அனைத்திலும் உயர்ந்த நிலையான மோட்சப் பெருநிலை கிட்டுகிறது. பக்தர்கள் பலரது வாழ்வு இதற்கு நல்ல சான்ருக அமைகிறது.

கடைத்தரமான பாபியர் கூடக் கடைத்தேற முடியும் என்று பகவான் கூறிய பின்னர், இடைத்தரத்திலுள்ளவர் கதி என்ன என்பதற்குப் பதில் வருகிறது.

**மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய**
**யே அபி ஸ்யு: பாபயோனய: |**
**ஸ்த்ரியோ வைச் யாஸ் ததா சூத்ராஸ்**
**தே அபி யாந்தி பராம் கதிம ||**

'பார்ததா, கீழான பிறவியர்களாகிய பெண பாலர், வைசியர், சூத்திரர் ஆகியவரும் என்னைச் சாாந்திருந்து நிச்சயமாகப் பெருநிலையை அடைகின்றனா.'

பெண்கள், வைசியர், சூத்திரர் ஆகியோரைப் பகவான் கீழான பிறவியர் என்று சொல்லுவது ஏன நாம் சிறிது ஆராய்நது பார்க்கக் கடமைப் பட்டிருக்கிருேம். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்பது தான் அடிப்பை உண்மையாக இருக்க இவர்களை ஏ கீழான பிறவியர் என்று பகவானே கூறுகிருர்?

ஒருவரது மனபரிபாகத்திற்கு ஏற் வாறு பிறவி மேலானதாகவே, அல்லது கீழானதாகவோ அமைகிறது 'மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் என்பது பழமொழி. ஏனெனில் உலக தவர் கண்ணேட்டத்தில் மேற்குடி பிறப்பினராக அமைந்தாலும், அவ களது மனபரிபாகத்தில் கீழ்த்தரமா வர்களாக இருப்பின் அவர்கள் மே மக்கள் ஆகமாட்டார்கள். எந்த குலத்தில் பிறந்தவர் ஆயினும் இய பாகவே மாதர்கள் உறுதியா உள்ளம் படைத்தவர் அல்லர். பெ களின் இயல்பு பேதைமையே. உட ரீதியிலும் ஆணகளைக் காட்டிலு பெண்களுக்கு ஒரு சில குறைபாடுக அதிகம் உண்டு. இதை அதிக பொருட்படுத்தாது விட்டுவிடினும் உள்ளத்தில் உறுதி பெருதிருப்ப பெணடிரின் சுபாவமாக அமைகிறது ஒரு சில பெண்கள் இதற்கு விதி வில காக அமையலாம். எனவே பொ வாகப் பெண்களைக் கீழான பிறவிய என்பது இநத அடிப்படையில் தான் மற்ற அம்சங்களில் ஆண்களோ( பெண்களும் சரி நிகர் சமானமே குறிப்பாக ஆன்மீக வளர்ச்சியில் இ( பாலருக்கும் ஒரே மாதிரியான சட்ட திட்டங்கள் பொருந்தும்.

வைசியர்களின் தொழில் வியா பாரம் செய்து பொருள் சேர்த் லாகும். பொருளைச் சேகரிப்பதிலேயே அவர்களது வாழ்நாள் முழுவதும் கழி துவிடுகிறது. பொருளில் ஒருவன நாட்டம் அதிகம் செல்லச் செல்ல அ( ளில் அவனது நாட்டம் குறைகிறது பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பது உணமையேயாயினும், அ( ளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை என பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். ஒரு விதத்தில் பார்க்க போனுல் பொருள் அருள் நாட்ட திற்குப் பெரும் இடையூருகக் கூட

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

அமைந்துவிடுகிறது அல்லவா! 'நான் பெரிய பணக்காரன். என்னை எவர் என்ன செய்ய முடியும்?' என்று மார் தட்டிப் பேசும் அளவுக்கு அல்லவா ஒருவனைப் பணம் ஆக்கி விடுகிறது! பணம் வெறும் ஜடப் பொருள்தானே. ஜடப் பொருளை சதா எண்ணி நிற்கின்ற அளவு அவர்களது புத்தியும் ஜடத் தன்மையுடையதாக விளங்குகிறது. இதற்கும் ஒரு சிலர் விதிவிலக்காக அமையலாம். ஆனால் பொதுவாக பணம் அதிகமாகச் சேருகின்ற அளவு ஒருவனது நெஞ்சு ஈரமற்றதாக மாறி விடுகிறதை உலகில் நாம் நிதர்சனமாகக் காண்கின்றோமே! எனவே ஜடபுத்தி படைத்த வைசியர்களைக் கீழான பிறவியர் என்கிறார் பகவான்.

சூத்திரர் அதிலும் கீழ்ப்பட்டவர். பிறரிடத்து அடிமைத் தொழில் செய்தல் ஒன்றுதான் அவர்களுக்கு இயலும். அடிமையாக இருப்பவனுக்குச் சுதந்திரம் எதுவும் கிடையாது. சூத்திரர் என்பவர் ஏதோ ஒரு குறிப்பிட்ட இனத்தை மட்டும் சார்ந்தவர் என்று எண்ணிவிட வேண்டாம். ஜீவனோபாயத்திற்காக தங்களது வாழ்நாளைப் பிறரிடம் ஒப்படைக்கின்றவர் அனைவருமே சூத்திரர்களாகின்றார்கள். பிறப்பால் மேல் குடியில் பிறந்தாலும் பிறரிடம் அடிமைத் தொழில் செய்தால் அவர்களும் சூத்திரர்களே. இந்தக் கோணத்தில் பார்த்தால் இன்றைய சமுதாயத்தில் பெரும்பாலோர் சூத்திரர்களே. வெறும் வயிறு வளர்ப்பதை மட்டுமே பிரதானமாகக் கொண்டுள்ள அவர்களும் கீழான பிறவியரே என்று பகவான் கூறுகிறார்.

இத்தகைய கீழான பிறவியரும் தங்களது மன பரிபாகத்தினால் மேலோர்களாக ஆவார்களேயாகில் அவர்களும் இறைவனைச் சார்ந்திருந்து பரகதி அடைகின்றனர் என்று கண்ணன் உறுதி மொழியளிக்கிறார். தேவையானது அனன்ய பக்தியே தவிர வேறு எதுவுமில்லை. பிறவி ஒரு நாளும் பக்திக்கு இடைஞ்சல் ஆகமாட்டாது. கஜேந்திரன் என்னும் யானை, ஜடாயு என்ற பறவை, ஆதிசேஷனாகிய பாம்பு போன்றனவையே தங்களது பக்தியின் பிரபாவத்தினால் இறைவனது அருளுக்குப் பாத்திரமாயின என்றால் மனிதர்களைப் பற்றிக் கூறுவானேன்?

பிரஹ்லாதன் ஒரு அரக்கன் மகனெனினும், அவனது பக்தியின் காரணமாகப் பகவான் நரசிம்ம உருக் கொண்டு அவனைக் காத்தருளினார். கோபிகைப் பெண்கள் படிக்காத பேதையர் எனினும் தங்களது தூய பக்தியினால் கண்ணனை அடைந்தனர். கம்ஸன், ராவணன் போன்றோர் அரக்க இயல்பு படைத்தவர்களாக, பகவானை சதா நிந்தித்தே வாழ்ந்தனர். ஆனால் அவர்களையும் பகவான் ஆட்கொண்டு அருளினார். தம்மை


Phones { Res : 24641 | Shop : 24026 }

Telegrams : "BONTEX"

Post Box No : 401

காஞ்சீபுரம், ஆரணி, திருப்புவனம்,
கும்பகோணம், பங்களூர்
சுத்தப் பட்டுச் சேலைகள் பல ரகம்
டெரீன், டெரீகாட்டன், சூட்டிங், ஷர்ட்டிங் பல டிசைன்களில்
வாயில், சீட்டி, கோட்டிங் ரகங்களும் மற்றும் நூல்
புடவைகள் வேஷ்டிகள் யாவும் ஒருங்கே
கிடைக்கும் ஓரே இடம்

# P. R. நாராயணசாமி அய்யர்

## பட்டு & நூல் ஜவுளி வியாபாரம்

494, பெரிய கடைவீதி, : : திருச்சிராப்பள்ளி—620 008.

**P. R. நாராயணசாமி அய்யர் அண்ட் கோ,**

கண்ணன் பஜார், : : காரைக்குடி.

ஸ்ரீ:

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன அருளிச்செய்த

# ஸ்ரீ ஸுதர்சநாஷ்டகம்

ஸ்ரீமாந வேங்கட நாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ
வேதாந்தா சார்ய வாயோ மே ஸந்நிதத்தாம ஸதா ஹ்ருதி

ப்ரதிபட ஸ்ரேணிபீஷண வரகுணஸ்தோம பூஷண
ஜநிபயஸ்தாந தாரண. ஜகதவஸ்தாநகாரண.
நிகிலதுஷ்கர்ம கர்ஸந. நிகமஸத்தர்மதர்ஸந
ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந:

ஸுப ஜகத்ருபமண்டந. ஸுரஜநத்ராஸகண்டந
ஸதமக ப்ரஹ்ம நந்தித. சதபதப்ரஹ்ம நந்தித
ப்ரதித வித்வத் ஸபக்ஷித. பஜத ஹர்புத்நயலக்ஷித
ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந.

ஸ்புடதடிஜ்ஜால பிஞ்ஜர. ப்ருதுதரஜ்வாலபஞ்ஜர
பரிகதப்ரத்ந விக்ரஹ பரிமிதப்ரஜ்ஞ துர்க்ரஹ
ப்ரஹரணக்ராமமண்டித. பரிஜநத்ராண பண்டித
ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந.

நிஜபத ப்ரீத ஸத்கண. நிருபதிஸ்மிதஷட்குண
நிகம நிர்வ்யூட வைபவ. நிஜபரவ்யூஹவைபவ
ஹரிஹயத்வேஷி தாரண. ஹரபுரப்லோஷகாரண
ஜய ஜய ஸ்ரீ ஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந.

தநுஜ விஸ்தார கர்தந. ஜநித மிஸ்ராவிகர்தந
தநுஜ வித்யா நிகர்தந. பஜத வித்யா நிவர்த்தந
அமர த்ருஷ்ட ஸ்வவிக்ரம. ஸமரஜுஷ்டப்ரமிக்ரம
ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந.

ப்ரதிமுகாலீட பந்துர. ப்ருதுமஹாஹேதி தந்துர
விகடமாயா பஹிஷ்க்ருத. விவித மாலா பரிஷ்க்ருத
ப்ருதுமஹாயந்த்ர யநத்ரித. த்ருட தயாயந்த்ரயந்த்ரித
ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதாஸந.

மஹித ஸம்பத் ஸதக்ஷர விஹிதஸம்பத் ஷடக்ஷர
ஷடரசக்ர ப்ரதிஷ்டித. ஸகலதத்வ பரதிஷ்டித
விவித ஸங்கலப கல்பக. விபுத ஸங்கல்ப கல்பக
ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதாஸந.

புவநநேதஸ்த்ரயீமய. ஸவநதேஜஸ்த்ரயீமய
நிரவதி ஸ்ரவது சிந்மய. நிகிலஸக்தே ஜகந்மய
அமித விஸ்வக்ரியாமய. ஸமிதவிஷ்வக் பயாமய
ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந. ஜய ஜய ஸ்ரீஸுதர்ஸந.

த்விசதுஷ்கமிதம ப்ரபூதஸாரம்
படதாம் வேங்கடநாயக ப்ரணீதம்
விஷமேபி மநோரத: ப்ரதாவந்
ந விஹநயேத ரதாங்க துர்யகுப்த:

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாண குணஸாலிநே
ஸ்ரீமதே வேங்கடேஸாய வேதாந்த குரவே நம:

அனுப்பியவர்: அத்திமாடபூசி ராமானுஜம்-திருப்பதி.

வந்தனை செய்வோரையும், நிந்தனை செய்வோரையும் ஒரே போக்கில் பரமன் ஆட்கொள்ளுவது அவரது தனிச் சிறப்பாகும். கீழ்க் குலத்தில பிறநத நந்தனுருக்குத் தில்லைப பெருமான் நடராஜராக தரிசனம் கொடுத்து ஆட்கொண்டார். இவற்றிலிருநது நாம் தெரிந்து கொள்ள வேணடியது என்ன? எந்தக் குலத்தில் ஒருவன் பிறந்திருந்தாலும் அவனிடம் அனன்ய பக்தி இருக்குமேயாகில் அவன் ஆண்டவனின் அருளுக்குப் பாத்திரமாகிருன் என்பதேயாம்.

''ஆஜுனு! இத்தகைய கீழான பிறவியவர்களே என்னை அடைய முடியும் எனில் புண்ணியவான்களும் பகதர்களுமாகிய பிராமமணர்களையும் அவ்வாறே ராஜரிஷிகளையும் பற்றிப் பின்பு பேசுவானேன்? நிலையறறதும் சுகமற்றதுமாகிய இநத உலகை அடைந்த நீ என்னை வழிபடுவாயாக'', (9-33) என்று அர்ஜுனனுக்கு அவனது கடமையைப் பகவான் நினைவூட்டுகிருர்.

கீழான பிறவியரைப் பகவான் 'பாப யோனியர்' என்ருர். அவர்களுக்கு மாருக, அந்தணர்கள், ராஜரிஷிகள், பக்தர்கள் போன்ருேர் புணணியர்கள் ஆகின்றனா. முற்பிறவிகளில் அவரவர் செய்த புணணிய பாபத்திற்கேற்ப பிறவியும வந்து வாய்க்கிறது. அந்தணாகள், அரசர்கள் போனருேர் ஏன் மேற்பிறவியர் எனப்படுகின்றனர்? பிராமமணர் அல்லது அந்தணர் என்போா அறவோா ஆவா. அறம் வளர்ப்போர் அந்தணர் எனில் அதை உலகுக்கு வழங்குபவர் அரசர் ஆகின்றனா. அறநெறி தவருது ஆட்சி செய்யும் அதே வேளையில் பற்றற்ற முறையில் வாழவும் செய்பவர் ராஜரிஷி ஆகின்றனர். ஜனகர் ராஜரிஷிக்கு நல்லதொரு எடுத்துக் காட்டாகிருர். தங்களது கடமைகளைச் செய்வதற்கிடையில் இறைவனது திருவடிகளையே நினைந்து நிற்பது இவர்களது சுபாவமாக

(28-ம் பக்கம் பார்க்க)

# அனுமன் கதை



18. நடுங்கி நின்றான்!

ஆயிர கோடி மேலும் அம்புதன்
ஆகத் தூடு
போயின போதும் ஒன்றும் துடித்திலன்!
பொடித்து மானத்
தீயெரி சிதறும் செங்கண் அஞ்சனை
சிங்கம் மேனி
நாயகன் தம்பிக் குற்ற துயரால்
நடுங்குகின்றான்!

2150. நாகபாசப் படலம்,
யுத்த காண்டம்.

இலக்குவனுக்கு இந்திரசித்துவினால் எந்தத் தீங்கும் நேரிட்டு விடக் கூடாதே என்ற ஏக்கத்தினால் அனுமன் இலக்குவன் இருப்பிடம் சார்ந்தான் என முன்னர்க் கண்டோம். சற்று நேரத்திற்கெல்லாம் சுக்ரீவனும் வானர சேனைகளுடன் அங்கே வந்து சேர்ந் தான். வானர சேனைகளும் அரக்கர் சேனைகளும் கடலைப் போலக் காட்சி யளித்தன. அளவு கடந்த பெருஞ் சேனைகள் போர் புரிய இருப்பதைக் காணும் ஆசையினால் தேவர்கள் வானத்தின் கண் வந்து குழுமினர். இரு திறத்துச் சேனைகளும் கடுமையாகப் போர்புரிந்தன. இரத்த வெள்ளம் ஆறாகப் பெருக்கெடுத்து ஓடியது.

இப்போரில், அனுமன் தன் கை களில் அகப்பட்டதையெல்லாம் அழித் தொழித்தான். அரக்கரது கொடி கள், குதிரைகள், விற்கள், அம்புகள் கதாயுதங்கள், வேலாயுதங்கள், யானை கள், தேர்கள் முதலிய பலவற்றையும் தன் வலியமலை போன்ற கைகளினால் உருத்தெரியாமல் அனுமன் தேய்த் தழித்தான்.

அரக்கர் சேனைகளை அங்கதன் சிதைத்தான். இந்த யுத்தத்தைக் கண்டு தேவரிஷிகள் பெரிதும் வியந் தனர்.

அரக்கர் சேனையால் தளர்வெய்திய வானரசேனையை வானரத் தலைவர் கள் ஊக்குவித்து நின்றனர். நீலன் இடபன், குமுதன், ஜாம்பவான், பன சன், மயிந்தன் முதலியோரது வீரச் செயலால் அரக்கர் சேனை தளர்வுற் றது. எனவே, இந்திரசித்து மட்டும் தனித்து நின்று போரிட வேண்டிய தாயிற்று. தன் வில்லாற்றலினால் இந்திரசித்து பகைவரை வென்று நின் றான். இதனைக் கண்ட சுக்ரீவன் இந்திர சித்துவைத் தாக்குவதற்காகப் பெரிய மாரமரம் ஒன்றைப் பிடுங்கிக்கொண்டு அரக்கர் சேனை நிலை குலையுமாறு அம் மரத்தை வீசிப் போர் செய்தான். தன் கொடிய அம்புகளால் இந்திர சித்து சுக்ரீவன் எறிந்த மராமரத் தைத் துண்டு துண்டாக்கினான்.

அப்போது, அனுமன் கொடிய ஆல கால விஷத்தைப் போன்று பெருங் கோபங் கொண்டவனாய், எல்லாரும் அஞ்சி நடுங்கும்படித் தன் தோள் களைத் தட்டி ஆர்ப்பரித்தான்; இடி போலப் பெருமுழக்கம் செய்தான். கண்டார் வியக்குமாறு மிகப்பெரிய தொரு மலையையெடுத்து இந்திரசித்து வின் மேல் எறிந்தான். அப்போது அவ்வரக்கன் பொழிந்த பாணங்களினால் அம்மலை சிதறிப் பொடிப் பொடியா யிற்று. அனுமானெறிந்த பெரியமலை இவ்வாறு பொடிப் பொடியானதால், போர் வலிமையும் பகைமைக் குணமும் கொண்ட இந்திரசித்து அனுமனை நோக்கி இகழ்ச்சியாகப் பேசலானான்.

## இந்திரசித்து :

நில்லடா! சற்றே நில்லடா! நான் இந்தப் போர்க்களம் புகுந்ததே உன் னோடு போர்புரிய வேண்டும் என்பதற் காகத்தான்! வில்லெடுத்துப் போர் புரியாமலே உன் வலிமையை நீயே புகழ்ந்து பேசிக் கொண்டிருக்கிறாய்! வில்லெடுக்கத் தெரியாத வீணனே; கல்லையும் மரத்தையும் கொண்டு புரி வதோ போர்முறை! அடடே, குரங்கே, நீ சொல்லடா!

## அனுமன் :

அற்பனே! எமது பக்கத்திலும் வில் லெடுத்துப் போர் புரியும் வீரர் சிலர் உள்ளனர். கல் எடுத்துப் போர் செய்ய வல்லவரும் எம்பக்கத்தில் இருக்கின்றனர். இந்திரன் முதலிய தேவர்கள் உன்னிடம் முன்பு தோற் றோடியதைப் போல, நாங்களும் உன் னிடம் தோற்றோடுவோம் என்று எண்ணி விடாதே! நாங்களும் வேறு சில புதுமையான போர்முறைகளைக் கொண்டு உன்னையழிக்கவே இங்கு வந் திருக்கிறோம்!

திரு. மா. சீதாராமன், M.A., BEd.,
பெருங்கட்டூர்.

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பலவேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேறகொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உணணும் உணவும்தான. இதை மனதிற்கொணடுதான தி. தி. தேவஸதானம் திருமலையிலும் திருப்பதியிலும யாத்திரிகாகள தங்குவதறகாக இலவச சத்திரங்கள பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும கட்டியுள்ளது. இவை எவவகையில் உதவியாக அமைநதுள்ளன என்பது திருமலைககு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நனகு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும, மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும சில சிறநத உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பறறிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின பொருட்டு கீழே வழஙகப்பட்டுள்ளன

## அன்னபூர்ணா ஹோட்டல்

*(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)*

சிறறுணடி நேரம்: 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M. to 3 P.M.
6 P.M. to 10 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

*(சனிக்கிழமைகளில பாயசம் வழஙகப்படும்)*

இவற்றைததவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானஙகளும் இங்குக கிடைககப் பெறலாம்.

## உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

*(தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)*

சிற்றுணடி நேரம் : 6 A.M. to 10-00 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2-30 P.M.
6 P.M. to 10-00 P.M.

தமிழ்நாடு சாப்பாடு ரூ. 4-00
வடஇந்தியச சாப்பாடு ரூ. 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத தவிர இனிப்பு வகைகளும், குளிர் பானஙகளும் நியாயமான விலையில் இங்குக கிடைககும்.

## காஃபி போர்டு

*(கலயாண கட்டாவிற்கு அருகில்)*

சிற்றுணடி நேரம . 5 A.M. to 10 P.M.
மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர் பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் : 5 A.M. to 10 P.M.
தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60
குளிர்பானங்களும் கிடைக்கும்.

## டீ போர்டு

*(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)*

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள (ஒரு பாக்கெட்) 75 காசு.

## தி. தி. தேவஸ்தானவிருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2 P.M.
7 P.M. to 9 P.M.

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில கிடைககும.

*(சாபபாட்டுக்கும், சிறறுண்டிககும 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தஙகள் தேவைககு தகவல தருதல் அவசியம)*

## திருப்பதியில் தி. தி. தேவஸ்தான உணவு விடுதி

*(இரணடாவது புதிய சத்திரத்திற்கு அருகில)*

சிற்றுணடி நேரம் : 5 A.M. to 9-30 A.M.
2-30 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 10-30 A.M. to 2 P.M.
6-30 P.M. to 9 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுணடி வகைகள், ஆமப்ரோ க்ளுகோ பிஸகட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உணடு

தி. தி. தேவஸ்தானத்தின் முதல சத்திரத்தில் உள்ள மற்றொரு தேவஸதான உணவு விடுதியிலும சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுணடி வகைகள் குளிர் பானங்கள் போனற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

நீ என்னுடனே போர் செய்வாயா? அன்றி, எம் தலைவனை இலக்குவனுடனே போர் செய்வாயா? உன் தந்தையாகிய இராவணனது தலைகளைத் துணித்துத் தள்ளுவதற்காகவே வந்துள்ள ஒப்பற்ற இராமபிரானுடனே போர் செய்வாயா? நீ எதைச் செய்ய வேண்டும் என்று கூறினாலும் அதை நாங்கள் மறுத்துக் கூற மாட்டோம். அஞ்சாதே!

இந்திரசித்து :

என தம்பியாகிய அதிகாயன் எனனும் சிங்கத்தைக் கொன்ற இலக்குவன, என் கையால் மாள வேண்டும் என்பதற்காகவே இன்னும் உயிருடன் இருக்கின்றான்! அந்த அறிவு கெட்ட இலக்குவன எங்கே இருக்கிறானோ அங்கேயே நான்சென்று அவனைக்கொன்று கோபந தணிவதற்காகவே நான் வந்திருக்கிறேன். அதுவுமின்றி, உலகங்களையே அழிக்கவல்ல கொடிய அம்புகளை நான் பிரயோகித்தால், உங்களது வீரத்தன்மையினால் அவ்வம்புகள் அடங்கிப் போகுமோ!

எனது படைவீரர்கள் அனைவரும் விலகி அப்புறம் சென்று விட்டனர். தன்னந் தனியாக உள்ள நான் ஒருவனே என் வில்லாற்றலால் ஓரே தேரில் உறுதியாக நின்று உங்களைக் கூண்டோடு ஒழித்துக் கட்டி விடுவேன்! இது சுத்தியம்! எனவே, நீங்கள் அனைவரும் என்னுடன் போர்செய்ய வாருங்கள. துணைக்கு வேண்டுமானால் விண்ணவரையும் மண்ணவரையும் கூட அழைத்துக் கொள்ளுங்கள். ஓரே பகலில் உங்கள் அனைவரையும் ஒழித்து வெற்றியும பெறுவேன். உங்கள அனைவரையும் வென்ற பின்னரே இவ்விடம விட்டு நகர்வேன். இது உறுதி!

இவ்வாறு வீரமொழி புகன்ற இந்திரசித்து தன் நெடிய வில்லை வளைத்தான். தொள்ளாயிரம் கொடிய அம்புகளை அனுமன் மேல் செலுத்தினான். இந்திரசித்து எறிந்த அம்புகள் அனுமனது உடலைத் துளைத்தன. அவ்வளவில் அனுமன் பொங்கி யெழுந்தான். சினத்தால் பற்களை நறநற வென்று கடித்தான். அருகிலிருந்த பெரியதொரு மலையைப் பெயர்த்தெடுத்தான். இந்திரசித்துவை நோக்கி அலட்சியமாக அனுமன் பின்வருமாறு பேசலானான்

"அடா மூடனே! உலகிலுள்ள யானைகள் அனைத்தும் ஒன்று திரண்டாலும் மிக்க சின முடைய சிங்கம் ஒன்றினை வெல்ல முடியுமோ? அரக்கர்களாகிய நீங்கள் அனைவரும் ஒரு சேரத்திரண்டு வந்தாலும் என்னை வெல்லுதல் என்பது முடியாத காரியம். என் தலைவனாகிய இராமபிரானின் திருத் தம்பியான இலக்குமணப் பெருமாள் வருமளவும் நீ காலந்தாழ்க்க


# சித்த மருத்துவ நூல்கள்

**25% தள்ளுபடியில் கிடைக்கும்.**

| | |
|---|---|
| **சித்தர் குறுநூல் :** | |
| எளிய முறையில் சகல நோய்களுக்கும் அனுபவ மருத்துவ ஏடு. | ரூ. 6–00 |
| **மாதர் மருத்துவம் :** | |
| பெண்கள் நலமுடன் வாழ வழி முறைகளை வகுக்கிற மருத்துவப் படைப்பு | ரூ. 6–00 |
| **உடலுறுப்பு விளக்கம் :** | |
| மனித உறுப்புகள், அதன் செயலவகைகளைப் படஙகளுடன் விளக்குகிற சிறந்த நூல. | ரூ. 7–00 |
| **திரிகடுகின் சிறப்பு :** | |
| சுககு, மிளகு, திப்பிலியின் மருத்துவ நயம் அடங்கிய அரிய நூல். | ரூ. 2–00 |
| **மதுவும் மானிட உடலும் :** | |
| உடல நலனை பாதிக்கும் மதுவின் தனமையை தெளிவுற விளக்குகிறது. | ரூ. 3–00 |
| **ஆட்டின் மருத்துவப்பண்பு :** | |
| ஆட்டின் உறுப்புகளின் மருத்துவப்பணபும், மனித நோய்களைக் குணப்படுத்தும் மகிமையும் அடங்கியது. | ரூ. 2–00 |
| **கடிவிஷ மருத்துவம் :** | |
| மனிதரைத் தாக்கும் எல்லா கடிவிஷங்களுக்கும் உன்னத நிவாரணி. | ரூ. 2–00 |
| **கொங்கையின் இரகசியம் :** | |
| பெணகளின் சாமுத்திரியா லக்ஷண காவியம். கற்க வேண்டிய நூல். | ரூ. 4–00 |
| **அகாலமரண நூல் :** | |
| எணணற்ற மர்மச்சாவின் காரணப் பூர்வத்தைக் கண்டுபிடிக்கும் கருவூலம் | ரூ. 6–00 |

குறிப்பு : தபால் செலவு இனம். புத்தக விலையை M. O. செய்க. வி பி. பி. கிடையாது.

**சித்த மருட பிரசுரம்**

3382, அண்ணாநகர், சென்னை - 600 040.

வில்லே. என்மீது அம்புகளேச் சொரிந்து விட்டாய்! இனி நீ உயிர் பிழைப்ப தெனபது குதிரைக் கொம்பே! இதோ இம்மலேயினே உன்மீது எறிகின்றேன. உனககு வல்லமையிருந்தால் இதனேத தடுத்து நிறுத்து பாாக்கலாம்!''

இவ்வாறு சினநது கூறிய அனுமன் தன கையிலிருந்த பெரிய மலேயினே இநதிரசித்துவின மேல் வீசி யெறிந் தான. திசையானேகள் எட்டினுடைய தந்தங்களேயும் தன்மார்பிலே பொருந தியுள்ள இராவணனின் மகனுகிய இந திரசித்துவின் மார்பிலே அம்மலேபட்ட அளவில், பழுக்கக் காய்ச்சிய இரும் பினேச சம்மட்டியால் அடித்தால் எவ் வாறு பொடிப் பொடியாய்ச்சி தறுமோ, அவ்வாறு அம்மலே பொடிப் பொடியாயிற்று. அம்மலே தனமார்பில் பட்டமையால் வஞ்சனேக்குணமுடைய இந்திரசித்து விஞ்சிய சினங்கொண டான. ஆயிரக் கணககான அம்புகளே அனுமன மேல செலுத்தினுன். ஒரே நேரத்தில இந்திரசித்துவின் பாணங் கள் ஆயிரக்கணக்கில் அனுமன் உட லில் ஊடுருவிச் சென்றதால் இரத்த வெள்ளம் பெருக் கெடுத்தது. ''இனி என்ன செய்யலாம்?'' என்று அனு மன் யோசித்துக் கொண்டிருக்கும் போது கொடுங் கண்களேயுடைய நீலன எனனும் வானரன அனுமனுக்கு உத வியாக அஙகே வநது சேர்ந்தான.

நீலன தனக்கு அருகிலிருந்த மலே யொன்றை இந்திரசித்துவின் மேலவீசி யெறிநதான். அதனே இந்திரசிதது தன அம்புகளால பொடிப் பொடியாக் கினுன். நீலன உடல முழுதும் சல்ல டைக கணகளாகுமபடி இந்திரசிதது அம்புகள் பலவற்றை எறிநதான். இதனுல நீலன் உடலிலிருநது இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தது. எனவே, நீலன செயலற்று நடுங்கலானுன். இந்நிலேயில் அங்கதன இந்திரசித்துவின் மேல் மலேகள் பலவற்றையும் பிடுஙகி எறியலானுன. அம்மலேகள அனேத்தும இந்திரசிததுவின அமபுகளால பொடிப் பொடியாயின. இவ்வாறு வானரத் தலேவர்கள் பலரும அழிந்து நிற்றலேக் கணட இலக்குவன் தானே அவ்இந்திர சித்துவுடன போர்புரியப் போவதாக விபீடணனிடம் கூறினுன். விபீடண னும் அதுவே சரியெனருன.

தனனேடு போரிட வநதவன இரா மனது தம்பியே எனபதை ஒறறர் மூலம் இந்திரசித்து கேட்டறிந்தான. படைத்தலேவா பலர் ஒருஙகு திரணடு இலக்குவனே நெருக்கினர். யானேப் படைகளேயும் குதிரைப் படைகளேயும் ஒருங்கே மாய்த்த இலக்குவன அரகக வீரர்கள் பலரையும கொன்று வெற்றி பெற்ருன்.

நீர் வற்றிய கடலுள் தனியே நின்ற மலே போல, தன்னேச் சூழந்துநின்ற அனேவரும் மாய்ந்து போகத் தான மட்டும் தனியனுய இருப்பதைக்கணட இந்திரசித்து மனம் புழுங்கலானுன். சினம் மிகுநத இந்திரசித்து தேரேறிச சென்று இலக்குவனே நெருங்கலானுன். இந்திரசித்து இலக்குவனே நோககி வருவதைக் கணட அனுமன அங்கே வந்து சேர்நதான.

அரககனுகிய இந்திரசித்து தேரேறி வரவும், இளேய பெருமாளாகிய இலக் குவன் தரைமேல் நிறகவும் கணட அனுமன், தன் தோள மேல ஏறிப் போர்புரியுமாறு இலக்குவனே வேண டிக் கொண்டு வணககமுடன் நிற்க லானுன்.

அனுமன வேணடிக் கொணடபடியே இலக்குவன அனுமன் தோள் மேல் ஏறிநின்று போர் புரிந்தான். இநதிர சித்துவும் இலக்குவனும கடுமையாகப் போர் புரிந்தனர். இருவருடைய வில் லின நாணகளும் பேரிடி இடித்தாற போனறு பேரொலி செயதன. இரு வரின விற்போரையும கணடு உலகங் கள் எல்லாம் நடுக்கங் கொணடு வருநதின. விரைநது போர்புரியும் இலககுவனின் போா வேகததுக்கேற்ப அனுமனும் சுழன்று சுழனறு வந்தான். இருதிறத்திலும் கோடிக்கணககான அம்புகள் எறியப்பட்டன. இவர்களின் விறபோர் கணடு இமையவரும் வியந தனர். இலக்குவன செலுத்திய நூறு அம்புகள இநதிரசித்துவின் மாாபில் தைத்தன. இதுவரை எந்தப் போரி லும் பின் வாங்காத இநதிரசித்து இந தப் போரில் உடலும உள்ளமும சோா வடைய ஒனறும் செய்ய முடியாதவனு

கி. பி. 6-மநூறறுண்டின பலலவா கற்கோயில-கூரம் (காஞ்சி)

திரு. கே. ராஜா—சென்னே-29.



கித் தனது வில்லைத் தரையில் ஊன்றி ஒன்றும் செய்யமாட்டாமல அடங்கியிருந்தான்

அப்போது இலக்குவனுககு வாகன மாக அமைநதிருநத அனுமன இந்திர சிததுவினுடைய தேரின் அசசையும் சக்கரஙகளையும் முறித்தான்; குதிரை களைக் கொனறு வீழத்தினை, ஒடிந்த அத்தேரையும உதைத்து உருட்டித் தள்ளினன்.

அனுமனால் தேர் அழிநதது கணட இந்திரசிதது தன் மாயையின் வல்ல மையால் ஆயிரம் பேய்கள பூட்டப் பெற்ற இரத்தினத் தேர் ஒன்றினைத் தருவித்தான. அத்தேர் மேல் ஏறிக் கொண்டு இலக்குவனுடைய தோளைக் குறி வைதது அம்புகள பலவற்றைப் பொழிந்தான். இநதிரசித்துவின் மாயையால வந்த ஆயிரம தேர்களை யும் ஒனறன்பின் ஒன்ருக ஒரு நாழி கைப் பொழுதினுள் இலக்குவன் அழிததான. இதுகண்ட அரககவீரர் கள் இந்திரசித்துவுக்குத் துணையாக வந்து இலக்குவனை எதிர்த்துப் போா புரிநதனர். அவ்வீராகளையெல்லாம் இலககுவன கொன்று குவித்தான.

அப்போது இலக்குவனின வாகன மாகிய அனுமன வீரச்செயல் புரிய லானுன. எதிர்த்து வநத அரககர்களை யெல்லாம தன்வாலினுல் சுற்றிக்கட்டி மேலே தூக்கி வாரித்தூவுவான், அரக கர்கள சிலரைத் தன் கால்களால் மிதிப்பான; சிலரின தலைகளை வெட் டித் தள்ளுவான, சிலரை ஆகாயத் தில் தூககி எறிவான; சிலரின எதிரே சென்று அவாகளின கனனத்தில் அறைவான், சிலரைக காலகளால் எட்டி உதைபபான; சிலரை விழிதது நோக்கி அச்சுறுத்துவான; சிலரைப் பாாவையாலேயே சுட்டெரிப்பான, சிலரை அதட்டுவான்; யானைகள சில வற்றைக கடலில போட்டுத தூர்ப் பான்; தோளகளைத் தட்டி ஆரவாரஞ் செய்வான; அரக்காகளின் ஆயிரக கணககான தேர்களைத தன் கைகளால பிடித்திழுப்பான.



உற்சவ மூர்த்திகளின வீதி உலா (நாக்பூர் ஸ்ரீசாவேஸ்வர தேவாலயம),
திருமதி. சுசிலா ராஜ கோபாலன்—நாகபூர்.

சிங்கம் போன்ற அனுமன் பகைவர் களின குதிரைகளைப் பூப்போலத் தூவு வான; நீரினை மொள்ளுவதுபோல யானைகளைக் கைகளில் அள்ளுவான்; காலாட் படையினரைத் தன் கை களால பிசைநது தளளுவான்; தேர் களையெல்லாம தரையினமேல் மோதி அடிபபான.

அரக்காகளையெல்லாம் அனுமன் இவ்வாறு அழித்துக கொணடிருக்கும் போது, இநதிரசிததுவின் கொடிய அமபுகளால் மூர்ச்சையுற்றிருநத வானர வீராகள் அம்மூர்ச்சை தெளியப்பெறறு எழுந்தனர். மூர்ச்சை தெளிந்த வானரர்கள் அரக்கர்களைக் கடுமையாக எதிர்ததனர். வாலியின் மகனுன அஙகதன் இந்திரசித்துவுடன கடுமையாகப் போரிட்டு இந்திர சிததுவை வென்ருன். தோல்வியுற்ற இநதிரசித்து நெருப்பு போலச் சீறி னன. இநதிரசித்துவும் இலக்குவனும் மீணடும் போா புரிந்தனர். இலக்குவன இநதிரசித்துவின் கவசத்தை வெட்டித் தளளினன். இதைக் கண்ட இநதிர சித்துவின் தேர்வீராகளான தூமி ராட்சனும், மகாபாரிசுவனும் இலக்கு வனை நோககிப் போருககு எழுநதனர். இலக்குவன் அவ்வீரரது வில்லையும் தேரையும் கவர்ந்து கொணடான்.

விற்களையிழநத தேர்வீரர் இருவரும் கதாயுதத்தைக் கையில் ஏந்திக்கொண் டனர். அவ்வீரர் இருவரும கதா யுதத்தால அனுமனை நையப் புடைத் தனா. அப்போது, அனுமன அவ் வரக்க வீரர்களின் கைகளிலிருந்த கதாயுதங்கள் இரணடையும் பிடுங்கிக் கொணடான். கதாயுதஙகளைப் பறி கொடுத்த அவ்வீரர் இருவரும் அனு மனுககஞ்சி, ''நாம் இங்கிருப்பின் நம் மிடமிருந்து பறித்துக்கொண்ட கதா யுதத்தாலேயே அனுமன் நம்மைக் கொனறு விடுவான்'' என்று உயிர் தப்பி ஓடலாயினர்.

இதறகிடையில் மூர்ச்சித்து விழுந் திருந்த வானர வீரர்கள அனைவரும் மூர்ச்சை தெளிந்து எழுநதனர். அங்க தன், குமுதன், நீலன், ஜாமபவான், சூரியகுமாரனுகிய சுகரீவன், மயிந்தன், அவன் தமபியாகிய த்விவிதன், சத வலி, பனசன் முதலான ஆண சிங்கம் போன்ற வானர வீரர்கள அனைவரும்

**(24-ம் பக்கம் பார்க்க)**

# அசேதனங்களின் மாநாடு

வங்கீபுரம் ரங்கஸ்வாமி ஐயங்கார்,
திருச்சானூர்

**பூமி:** உலகில மானிடர், பல குழுக்களைக் கொண்டு பல்வேறு வழிகளில் முன்னேற்றம் அடைவதுபோல் நாமும் நம் கழகத்தைக்கொண்டு முன்னேற்ற மடைவோமாக. இங்குள்ளோர் அவரவர் அபிப்பிராயங்களை அறிவிக்கலாம் இக்கூட்டத்திற்கு இமயனுர் தலைமை வகிப்பாராக.

**இமயம்:** கடின மனதுள்ளவரை கல்நெஞ்சுள்ளவரென்று சொனனுலும், உலகத்தில் உத்தமராகக் கருதப்படும் இராமபிரானை ''தைர்யேண ஹிமவானிவ'' என்றே வான்மீகி பகவான புகழ்ந்துள்ளார். எத்தகைய துன்பத்திலும் இராமபிரானின் மனஉறுதி தளராததென்பது உலகமறியும்

**பூமி:** உலகத்திலுள்ள உயிர்கள் எல்லாவற்றையும் தாங்குவதேயல்லாமல், எல்லாவற்றுக்கும உணவளிப்பதும், எல்லா பிராணிகளால் நேரும் அஸஹ்யங்களை (இன்னல்களை) பொறுப்பதால் என பொறுமையைப் புகழ்ந்து, அத்தகைய பொறுமையையுடைய இராமசந்திரனை ''க்ஷமயா ப்ருதிவிஸம:'' எனபர்.

**கடல்:** பூமியின் மொத்தப் பரப்பளவில் நான்கில் மூன்று பங்குக்கும் அதிகமாய் இருப்பவன நான். மழைக்கும முக்கிய காரணமல்லவா நான்? மீன போன்ற உணவுப் பொருட்களையும், முத்து, பவழம் போன்ற உயர்ந்த பொருட்களையும அளிப்பவன் நான். எனமீது தான பெரிய கப்பல்கள் பிரயாணம் செய்கின்றன. எனக்கும் ஒரு தனிப் பெருமையுண்டு ''ஸமுத்ர மிவ காம்பீர்யே'' என்று இராமபிரானுல் எனக்கும் ஓர் உயர்நிலை உண்டாயிற்று.

**சந்திரன்:** அழும் குழந்தையும என்னைப் பார்த்து மகிழுமல்லவா? ஆதலால இராமனுக்கு ''இராமச்ந்திரன்'' எனறு புகழ் வந்தது. ''ஸோமவத் ப்ரியதர்சன.'' 'சந்திரனைப் போல் ப்ரியமாகக் காட்சியளிப்பவன்' எனறு இராமனுக்கு ஓர் ஏற்றமே ஏற்பட்

**மூங்கில்:** வேணுகோபாலனின புலலாங்குழல் கானம அன்றே ஆயர்பாடி சிறுமியர்களையும் மயக்கியது? அரச மரம் போன்ற பல மரங்கள் இருந்த போதிலும் பகவானுடைய பவழம போன்ற உதடுகளை அனுபவிக்கும் பாக்கியம் எனக்கன்றே ருக்மணி, சத்யபாமா போன்றவர்களைப்போல் கிடைத்தது.

**மயில் தோகை:** ஆஹா! என் பாக்கியமே பாக்கியம். ஒரு பறவையின் தோகையாயிருந்தாலும கண்ணபிரானின தலைக்கு அணியாக இருக்கும் நிலைமை எனக்குக் கிடைத்தது.

**சூரியன:** உலகிலுள்ள சந்திரன், நட்சத்திரங்கள் முதலான எல்லாவற்றுக்கும ஒளி அளிப்பவன நான் கடல் நீரை மேகங்களாக மாற்றி மழைக்குக் காரணமாகவும் ஆகிறேன. என வெப்பத்தினுல் என்னை 'தபனன்' எனபார்கள். இராவணனைக் கண்டு ஸீதா பிராட்டி ''பாஸ்கரேண ப்ரபாயதா'' என்றுள். சூரியனின கிரணங்களை அவனிடமிருந்து பிரிக்க இயலாதது போல என் மனதை என் கணவனுகிய இராமனிடமிருந்து பிரிக்க இயலாது எனறுள் என்னுள் கிரீட ஹாரங்களுடனும, குண்டல கேயூரங்களோடும் (காது, தோள் அணிகளுடனும) உள்ள பொனமேனி படைத்த நாராயணனைத் துதிக்காதவர் உண்டா?

**கமலம (தாமரை)** உலகில எண்ணிலா மலர்களிருந்தும் எனக்கு தனித்து ஒரு சிறப்புண்டு. பகவானுடைய முகத்தையும், கண்களையும, வாயையும், கைகளையும, திருவடிகளையும் என்னுடன ஒப்பிடுவது தான் வழக்கம இதைவிட பாக்கியமுண்டோ யாருக்கேனும்? வேதாந்திகள் தாமரையில் ஜலம (தண்ணீர்) பட்டும் ஒட்டாததைப் போல குடும்பத்திலிருந்தும் பற்றற்று இருக்க வேண்டும் என்பார்கள் அல்லவா?

**முகில் (மேகம்):** நீர் கொண்ட என்னைக் கண்டால் மயில் தோகையை விரித்து நடனமாடுவது உலகமறியும் வெப்பத்தால் தவிக்கும் பிராணிகள எனனைக் கண்டு மகிழும். நான் பெய்யும் மழை உலக தாபத்தை அடக்குவது மாத்திரமல்லாமல் பயிர்களுக்கும செடி கொடிகளுக்கும் மற்ற எல்லா பிராணிகளுக்கும புத்துயிர் கொடுக்கும் மாலின நிறமும் என் நிறமல்லவோ? அவரைக் கண்டால் ஆத்யாத்மிகம (இதில் இரண்டு விதம உண்டு. 1. உடலுக்கு ஏற்படும துன்பங்கள (நோய்கள்), 2. மனதிலிருக்கும் துன்பங்கள காம, க்ரோத, லோப, மோஹ மத, மாத்ஸர்யங்கள), ஆதி பௌதிகம் (பறவைகள, ஜந்துக்கள், மனிதர்களால் நேரும் துன்பங்கள்), ஆதி தெய்வீகம் (மழை, புயல், இடி, பூகம்பம் முதலியவற்றுல் நேரும் துன்பங்கள்) என்னும் மூன்று தாபங்களும் தீரும்

**ஆயுதங்கள்:** சங்கு, சக்கரம், வில், வாள், வேல், வஜ்ரம எனபவை தேவர்கள் கையிலேந்தும் ஆயுதங்களாகும். இவற்றுல் சங்கி, சக்ரி, சார்ங்கி, வஜ்ரி, வேலன், சூலி என்ற திருநாமங்கள் தேவர்களுக்கு அமைந்தன. தீயோரை வெல்லவும், நல்லோரைக் காக்கவும் நாங்களன்றே பயன்படுகிறோம்? பகவான் எங்களைக் கொண்டுதான் தன் கடமையைச் செய்கிறுர்.

**தலைமை வகித்த இமயம் முடிவில கூறியதாவது:**

''நண்பர்களே! இன்றல்லவோ நன்னுள்! நாம் எல்லோரும ஒன்றுகூடி ஒவ்வொருவரால உலக வாழ்வுக்கு என்ன தொண்டு புரியப் படுகின்றதோ அதைப்பற்றி விவரித்துக் கூறினேம். நம்மை விட அறிவுள்ள மானிடர், தேவர்களுக்கு நம்மாலும உதவியுண்டு என்பதை நினைக்கும போது மகிழ வேண்டியதாகும். உலகிலுள்ள உயிருள்ள பிராணிகள், உயிரிலலா பொருட்கள் எல்லோரிடமும பகவான் பொதுவாக அன்பு செலுத்தி எல்லோருக்கும் ஒவ்வோர் விதமான தொண்டு செய்ய இயலும சக்தி கொடுத்ததற்கு நாம் அவரை எப்பொழுதும் துதித்து நலமடைவோமாக!



பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, முதறசங்க காலத்தில், தமிழர் மருத்துவ முறையில் சிறந்து விளங்கினாகள் என்று தெரிகின்றது ஆரியர்கள் இந்தியாவில் குடியேறுவதற்கு முனபு மொகன்ஜசோதாராவில் காணப்படும் பசுபதி தோற்றமும், யோக முததிரைகளும் திராவிட நாகரிகத்தின் பழமையை எடுததுக் காட்டுகின்றன எனறு சர் ஜான் மார்ஷல் கூறுகின்றார். ஆதிசிவன நந்தி மூலர் வழியாகத் தோனறிய சித்த மருத்துவம், உலகில் தோன்றி உள்ள ஆதி மருத்துவக் கலையை அடிப்படையாகக் கொண்டுளளது.

பதினென் சித்தர்களில ஒருவராகிய திருமூலர், “மறுப்பதினி நோய் வரா திற்கு மெய உணர்வு என்றும் சொல லபபடும

சரீரததில் வளி, பித்து, ஐயம எனற மூன்று தோஷங்களை (வாத, பித்த, சிலேத்துமம) எந்த மாத்திரையின அளவாக வைத்து இயங்கும்படிச செய்தால் ஒருவன் ஆரோக்கிய நிலையில் இருப்பானே, அப்படியே வைத்து இயல் செய்வது வைத்தியம் என்று திருமூலரின் எணணாயிரத்தில கூறப்பட்டிருக்கின்றது. இந்தக் கருத்தில் ஆயுர்வேதமும், சித்த வைத்தியமும் பூரண ஒற்றுமை உடையது வைத்திய முறையில் கையாளபபடும் வழிகளும், கருவிகளும் சாதனங்களும வேற்றுமை உடையன. சித்தர் நூல்களில் நவ லோகங்களையும், பஸ்பம், செநதூரம

# சித்த மருத்துவத்தின் சிறப்பு

திருக்க மறுப்பது சாவை மருநதென லாமே” என்று கூறினர். உடலின முப்பிணி அகற்றிய சீலாகளாகிய சிததர்கள் நோயற்ற வாழ்வு வாழக கறபிததார்கள்.

எண்வகை நோய்களைக் கணடுபிடிப்பது, சிறுநீரில் நெய்களைவிட்டு நோய்களையும், அவை தீரும, தீராது என்று கணடுபிடிக்கும வகையும் சித்த மருத்துவததிற்கே உரியது. நோய் வந்தபின் காணபதைவிட, நோய வராத முன்பு குறி குணங்களை அறிதலபற்றிய நாடித தோவு முறை சிததாகளின தனிச் சிறபபு.

ஆனால், வடமொழி ஆயுாவேத முறைப்படி ‘திரிதோஷ முறை’ பிணி ஏற்பட்ட பிறகேயாகும். உலகில் மக்கள் இனப வாழ்வு எய்த, ஆதி காலம் தொட்டு ஆராய்சசி செய்து வநதிருக்கினறனர். உடல் நலம் மட்டுமின்றி, உளளத்தின் அமைதியையும் ஒருங்கே அடைய வேணடுமென்று இந்த இருவகை ஆராய்ச்சிகளையும மேறகொணடிருநதனர் உடல நலத்திற்கு மருத்துவம் என்றும், உள் நலத்

செய்யும் வழிகள பெரிதும் வித்தியாசப்படுகின்றன.

சித்த வைத்தியத்தில் மிகவும் சிறப்புடைய சவர்க்காரம், வழலை, முப்பு, ஜெயநீர் என்று சொல்லபபடும் மருந்து முறைகளை வேறு எந்த வைத்திய முறையிலும் காணமுடியாது. நெருப்பைக் கண்டால புகைந்தோடும் சரககுகளைப் புகையாமல் நிறுத்தும் வெறறி பெற்ற வழிகளைச சொல்லுவது சித்த வைத்தியம.

ஆயுர்வேதத்திறகு முதற் கர்த்தா தனவந்திரி அஸவனித்தேவர். அது போல தமிழ் சிதத வைததியம் அகத்தியர், திருமூலர் முதலிய பதினெண வகை சிததாகளையும் ஆசிரியர்களாகக் கொண்டது.

சித்த வைததியத்தின் முறைப்படி மருந்து தயாரித்து அதை முறைப்படிச் சாப்பிட்டுவந்தால் வியாதி வராது. வநத வியாதி தீர்ந்து திரேகம் தங்கம் போல மாறும். மேலும் வியாதி வரா திருககவும், உடலைத் தூய்மைப்படுத்தவும் செய்யும்.

சித்த வைத்திய விதிமுறைப்படி மருந்துகளைச் செய்து [illegible] 'சித்த வைத்தியம்' தான் என்று [illegible] கூற முடியும். இதில் சந்தேகத்திற்கு இடமே இல்லை.

“மண் ஆலிகை வலுப்புநதீர்
பண்றுடற பொருள பாடாமை லோகம
இனியற சதது இரசமணி யோகம
ஒனறற கொன்று உயா விலக்காம நோயககே”

என்று திருமூலர் பாடல, வைத்திய முறையின் வரிசையையும், நோய் நீக்கும் மருந்துகளின குண விசேஷ தாரதமமியஙகளையும விளக்குகின்றது

எட்டுவித அமசங்களைக் கொணடு சரீரத்திலுள்ள வியாதிகளை நிர்ணயிககும் வழி, அஷ்டாங்கப் பரீட்சை என்று சொல்லப்படும். இதில நாடிப் பரீட்சையை முக்கியமாக, பிரதான சாதகமாகச் சித்த வைததியர்கள் வைத்துக் கொண்டிருக்கினறார்கள். வேறு எந்த மருத்துவமும், நாடிப் பரீட்சைக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை.

இரணடாயிரம் ஆணடுகளுக்கு முன் வாழநத திருவள்ளுவர், தமது குறளில், மருநது என்ற அதிகாரத்தில் சொல்லி இருக்கினற கருத்துக்கள்

டாகடர். கே. ஸ்ரீனிவாசன்,
ஆரணி. (வ.ஆ,ஜி.)

தமிழ் மருத்துவ முறையையும், அதன் சிறப்பையும் உணர்த்துகின்றன.

“நோய நாடி நோய் முதனாடியது தணிக்கும்
வாய நாடி வாய்ப்பச செயல்”

“மிகினும் குறையினும் நோய் செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று”
—குறள்

என்றஉயரிய கருத்துக்கள் யாவரும் பொன்னேபோல் போற்றற்குரியன. சித்த வைத்தியத்தில், மற்ற வைத்தி

யத்தினுல் தீராத நோய்களைத தீரதது வைக்கவலல பேரா இயற்கை வழி யுடைப் பொருட்கள் அமைந்த கலவை களும், ஜெயநீர வகைகளும், கல்ப சத்து, செநதுாரஙகளும் உ ள் ள ன. ஆதலால, யாவருமே போற்றற்குரிய ஏற்றமும், தோற்றமும உள்ளது. இதுவே சிதத வைத்தியத்தின தனிச் சிறப்பு.

இனி, சித்தர்கள் யார்? அவாகளின் காலம என்ன? அவாகளின இருப்பிடம என்ன என்பதைப்பறறி ஆராய்வோம்.

சிததி பெறறவாகள், பேறு பெறற வாகள, வீட்டினபம் அடைநதவர்கள், சிததத்தில சிவனைக் கண்டவர்கள், சிதததனைச் சிவன போல வைத்தவா கள, கடவுளைக்காண முயல்பவர்கள், பக்தாகள் கண்டு தெளிந்தவர்களைச சித்தாகள என்கிறது தேவாரம். சிததர் கள் அநுபூதி (Mystics) உடையவர்கள். சிததாகள் எலலா சமயததிற்கும அப் பாறபட்டவர்கள. இவர்கள் சர்வ சமய சன்மாாக்கததினைப் போதிப் பவர்கள்.

சித்தர்கள் குறிப்பாக பதினெட்டு பேர்களையே குறிககிறது. அவர்களில 1. அகததியா, 2. திருமூலா, 3. போகர், 4. கொங்கணர், 5 சட்ட முனிவர், 6. ராமதேவர், 7. கமல முனி, 8 மசச முனிவா, 9 ரோம ரிஷி, 10. கருவூரா, 11. கோரககா, 12. இடைககாடா, 13. சுந்தரா னந்தர், 14. அகபபைசித்தர், 15. பாம்பாட்டி சித்தா, 16. தேரை யர், 17. யாககோபு முனிவர், 18. வீர மாமுனிவர். இவர்கள அஷ்டமா சித்தி பெறறவர்கள். அஷ்டமா சித்தியைப்பறறி பிறிதொரு கட்டுரை யில பாாப்போம். ★

---

(21-ம் பக்கத தொடர்ச்சி)

தெளிவு பெற்று இநதிரசித்துவுடன் போா புரியலாயினா. ஆனுல், இந்திர சித்தோ இவர்கள் அனைவரும் எறிநத மலைகள முதலானவற்றைத தன் அம பினுல் பிளநது பொடிப் பொடியாக கினுன். இவ்வேளையில் மாலைக காலம வரவே, எஙகும் ஒளி குறைநது இருள் பரவலாயிற்று.

அப்போது விபீடணன் இலக்குவனை நோககி உபாயம் ஒனறைக் கூற லானுன்.

''நாகம் போல் சீறும வீரனே! இன்னும் நீஙகள் கால நாழிகைக்குள இநதிரசிததுவைக் கொல்லாவிட்டால், அவனைப் பின்னர் கொல்லுதல் என பது முடியாத செயலாகிவிடும். ஏனெ னின், அரக்காகள் மாயையில வல்ல வர்கள். அரக்கனுன இநதிரசித்து மாயையால போர் செய்ய வேணடி- அதறகு இரவுப்பொழுதே ஏற்ற தென்று கருதி ஆகாயததினமேல் செல்வான். அவவாறு அவன் சென ருல் வெறறி அவனுககே!''

வீடணன இவ்வாறு கூறக்கேட்ட இலக்குவன் இரவுப் பொழுதிற்குள் இந்திரசித்துவைக் கொல்லக கருதி, இந்திரசித்துவின் அழகிய தேரினைத் தன் அம்பினுல் அழித்துத் தள்ளினுன்.

இநதிரசித்து தன தேர்கீழே வீழ் வதற்கு முன்னரே, கண் மூடித்திறப் பதறகுள தன் விலலுடன தப்பிதது ஆகாயம நோக்கிச சென்றுன் இவன் வானத்தின் மறைநதது கணடு, ''யாதாகுமோ?'' எனத் தேவர்கள் அஞ்சி நடுங்கினர் நீலநிறமுடைய இநதிரசித்து தன் மநதிர பலத்தினுல் அணுப் போலச் சிறியதொரு வடி வததை எடுககலானுன். தேவர் மூவ ரையுமே அழிக்கவல்ல நாகத்தின் பெயரைக் கொணட அஸ்திரத்தைத் தன மனததுள அபி மந்திரிதது எடுத் தான. இநதிரசித்து தோறறோடி விட்டதாக வானரரும் இலக்குவனும் தமமுள மகிழநதிருந்தனா. இனி நடக்க இருபபதைச சிறிதும் உணராத இலககுவன் அனுமனுடைய தோளி லிருந்து கீழிறங்கிச்சற்று இளைப் பாறத் தொடஙகினுன்.

இதற்கிடையில் இந்திரசித்து நாகா ஸதிரத்தைப பிரயோகித்தான். அது விரைந்து சென்று இலககுவன் தோள் களை இறுகக கட்டியது. நாக பாசத் தின் வலிமையை அறிந்த அனுமன், ''இந்திரசித்துவைத் தேடிப் பிடித்துக் கொல்லுவேன்!'' என வானை நோக் கிக் கிளமபலானுன். அப்போது இந் திரசித்து செலுத்திய நாகபாசம் அனுமன் தோள்களையும் பின்னிப் பிணைத்தது. வானரவீரா அனைவரு டைய தோள்களையும் அவ்வஸதிரம் இறுகப பற்றினமையால், செய்வதறி யாது வானரர் பலரும் திகைததனா.

''அஞ்சனை தேவி பெற்றெடுத்த ஆபதசகாயனுன அனுமனும் இப் பாசத்தினுல் கட்டப்பட்டானே?'' என வானர வீரர்கள் புலமபலாயினர். ஏனெனில், அனுமன் ஒருவனே இதற்குப் பரிகாரம் காண முடியும் என்பது அவ்வானர வீரர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை!

இவ்வேளையில் இந்திரசிதது பல அம்புகளை வானரர்களின்மேல் செலுத் தினுன். அப்பாணங்கள் வானரர் களின உடலை ஊடுருவிச சென்றன. மலை போன்ற வானராகள் பலா மண ணிற சாயநதனா எஙகும் இரதத வெள்ளம் பெருகிப் பரவலாயிற்று.

அனுமனது உடலிலும் ஆயிரம கோடி அம்புகள் தைததுச சென்றன. அனுமனது கண்கள் கோபததால் சிவநதன. தன் உடலின துனபததுக் காக அவன சிறிதும வருந்தவிலலை.

தன தலைவனுன இராமபிரானது தம்பி இலக்குவனுககு நேர்ந்த துன் பம் தன மனததைச சுட்டு வருததிய தால, அவ் இலககுவனுக்கு நோநத இடுக்கண் காணச சகியாதவனுய் அனு மன் உடல் நடுங்கி நின்றுன!

(தொடரும்)

# பாகவதம்

திரு. பெ. சின்னக் குழந்தை
திருப்பதி.

அன்று முதல் இன்று வரை என்றும் நின்று நிலைத்திருப்பது எதுவோ அதுவே உண்மையானது. எது ஆதியும் அந்தமும் இல்லாதது; பிறப்பு இறப்பு அற்றது; 'விருப்பு வெறுப்பில்லாதது; அதுவே உண்மையானது— என்று முள்ளது. மற்றவை மாறக் கூடியன; நிலையற்றன, மெய்ப்பொருள் நோக்கில் பொயமையன.

மனிதன் ஒருவனே சிந்திக்கும் ஆற்றல் பெற்றவன். அவனதன் சிந்தனு சக்தியால் உலக இயக்கத்தையும் பிரபஞ்சத்தின் எல்லையற்ற நிலையினையும் சிந்தித்துப் பார்க்கிறுன். சிந்தைக்கும் எட்டாத, அறிவுக்கும் அப்பாற் பட்டவனுக இறைவன் மிளிர்வதை அவன் உணர்கிறுன். 'தான் பெறற இனபம் பெறுக இவ்வையகம்' என்றெணணித் தான் உணர்ந்த அப் பேரின்ப வாழ்வின் பெருக்கை எல்லா மக்களும் உணர வேண்டும் என்று ஆசைப்படுகிறுன்.

எல்லையற்ற பரவெளியில் இயங்கும் கோடிக் காணககான அண்டங்களை யும், பேரண்டங்களையும் இயக்கும் சக்தி யாது? அஃதெங்குளது? என்று வினவுகின்றது அம்மனித மனம். இதே தத்துவ விசாரணை தாயுமானவ சுவாமிகளுக்கும் உடன்பாடே!

'அஙகிங கெனுதபடி எங்கும பிரகாச மாய்
ஆனந்த பூரத்தியாகி அருளொடு நிறைந்ததெது
தன்னருள வெளிக்குளே அகிலாண்ட கோடியெலாம
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க்கு உயிராய்த் தழைத்ததெது'

இந்த வியப்புக் குறியே திருவாத பூரடிகளாருக்கும் ஏற்படுகிறது. அவர் அருளிச் செய்த திருவாசகத்தின் முதற்பகுதியான திருவண்டப் பகுதியிலே,

'அண்டப் பகுதி உண்டப் பிறக்கம்
அளப்பெருங் காட்சி வளபபெருந் தன்மை
ஒன்றினுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றெருரு கோடி மேற்பட விரிந்தன.'

எனப் பாடி வியக்கிறுர். அகிலாண்ட புவனங்களின் இயக்கங்களையும் அவற்றின் அளவு கடவாத சுழற்சியையும் கண்டு வியக்கிறது மாணிக்க வாசகப் பெருமானின் நெஞ்சம்.

மேற்கண்ட உண்மையினை ஞானியரும் யோகியரும் ஞாலத்து மக்களுக்குப் பயன் தரும் வண்ணம் ஆக்கித் தந்துள்ளனர். பூமியின் உட்பகுதியில் தங்கம் எங்கெங்கோ பரவிக் கிடக்கிறது. அஃது இக்குறிப்பிட்ட இடததிலே அதிகமாய் உள்ளதென ஆய்ந்து சொல்லும் புவியியல் அறிஞனைப் போல, எங்கும் நிறைந்த இறைவனை ஞானியர், மக்கள் உணரும் வண்ணம் வடிவாக்கும் பொழுது அவ் விறைவன் தங்கமாய் மிளிர்வதைக் காண்கின்றனர். 'ஈதர்' என்னும் சக்தி எங்கும் வியாபித்திருத்தல் போல் விஷ்ணு எவ்விடத்தும் நீக்கமற வியாபித்துள்ளார். அவர் ஞானியர்தம் மனநிலையிலிருந்து மக்களுக்கு உபதேசம் செய்கிறுர், ஈதரை ஒலி அலைகளாக மாற்றித் தரும வானெலிப் பெட்டியைப் போன்று.

வேதங்கள் ஞானியர்களாலே புரிந்து கொள்ளும் தன்மையன. அவ்வேத உண்மைகளை, அதன் உட்பொருளை உபநிடதங்களின் ஒழுங்கமைப்பு முறைகளால ஒருவாறு உணரலாம். இவ் உபநிடத உண்மைகளின் தொகுப் பாகப் பிரம சூத்திரத்தின் விளக்கமாய் அமைவது பகவத் கீதை. இத்தகு இறை உணர்வாகிய அறிவைத் தொடும் உண்மைக் குறிப்புக்களும் விளக்கங்களும் பாமர மக்களின் உணர்வைத் தொடச் சான்றேர் செய்த முயற்சியே இதிகாச புராணங்கள்.

பெரியவாகள் கசப்பான மருந்தையும் அப்படியே விழுங்கிப் பலன் கொள்வர். ஆயின் குழந்தையே கசப்பான மருந்தை உடல நலத்திற்கு உகநததென அறியாததால் வெளியே துப்பி விடுகிறது. விழுஙக மறுக்கிறது. ஆனல் தாயானவள் மருந்துடன் சர்க்கரையையோ அல்லது தேனையோ குழைத்து உண்பிப்பாள். அதே போன்று அறிவிலும் ஆன்ம நிலையிலும் உயர்நிலை பெற்ற பெரியோர்கள் நமையொத்த பாமர மக்களுக்குக் கதைவாயிலாகக் கற்பனைச் சுவையுடையதாய் ஆக்கி ஊட்டுகின்ற ஆன்ம உணவு நமது ஆன்மீக வாழ்விற்குப் பலமளிப்பதாகும். இவ்வான்ம பலத்தால் உயிர் தூய்மையடைகிறது. மோட்சம் எளிதில் கிட்டுகிறது.

முத்தொழிலும் இயற்றி முதன்மை பெற்றவர் திருமால். அத்திருமாலை வாழ்த்து முகமாக அவர்தன் தனித் தலைமையைச் செவ்வைச் சூடுவார் எனும் அருங்கவி வணங்குகிறுர்.

'ஏர்பூத்த முததொழிலு மினிதியற்றித் தனிநின்ற
கார்பூத்த திருமேனிக் கடவுண்மல ரடிநினைவாம்.'
—செவ்வைச் சூடுவார் பாகவதம் பாடல்,

இந்து மதத்தின் இரு கணகளாகிய சைவமும் வைணவமும் தனித்தனியே தமிழ்மொழியில் பேசப்படுகின்றன. இவை முறையே தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலான நூல்களாலும் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தாலும் உணரலாம். ஆயினும் வைணவ சித்தாந்தத்தை விரிவாகக் காணப்புகின் சமஸ்கிருத மொழியையே நாட வேண்டியுள்ளது.

பகவான் சம்பந்தமானது என்ற பொருளில் பாகவதம் எனும் பெயர் அமைந்தது. இதனை வடமொழியான




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்)பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2000 |
| திருப்பாவாடை | ,, | 4000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2000 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துழை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

சம்ஸ்கிருதத்தில் எழுதியவர் வேத வியாச மாமுனிகள். பாகவதம் திருமாலுக்குரிய புராணங்கள் நான்கினுள் ஒன்று. இது பதினென் புராணங்களுள் அடங்கும். திருமாலுக்குரிய ஏனைய மூன்று புராணங்கள்: கருட புராணம், நாரதீய புராணம், விஷ்ணு புராணம் என்பன.

தமிழில் பாகவதம் முதனூலாக எழுதப் பெறவில்லை. வடமொழியில் வியாச மாமுனிகள் எழுதிய பாகவதமே தமிழ்ப் பாகவதத்திற்கு மூல நூலாகும். இதைத் தமிழாக்கியவர்கள் இருவர். ஒருவர் பாண்டிய நாட்டில் வைகை நதியின் வடகரையிலுள்ள வேம்பத்தூரினர்: செவ்வைச் சூடுவார் என்னும் கவிஞர். இவருக்கு மாதவ பண்டிதரென்னும் மற்றொரு பெயருமுண்டு, மற்றவர் வரதராஜ அய்யங்கார். இவர்களுள் நடையிலும் பாவமைப்பிலும் நயத்திலும் செவ்வைச் சூடுவார் கவிநயமே போற்றுதற்குரியது.

இச்செவ்வைச் சூடுவார் பாகவதம் பன்னிரண்டு பெரிய பிரிவுகளாகப் (ஸ்கந்தம்) பகுக்கப்பட்டுள்ளது. இப் பெரும் பிரிவுகள் நூற்று ஐம்பத்தைந்து அத்தியாயங்களாக (சிறு பிரிவு) வகுக்கப் பெற்றுள்ளன: மொத்தமாக 4970 பாக்களில் மிளிர்வது செவ்வைச் சூடுவார் பாகவதம். இந்நூலின் கவிநயம் போற்றிய தமிழ்த் தாத்தா மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர்கள் இதற்குக் குறிப்புரை எழுதி அச்சேற்றினார்கள். திருமலை திருப்பதி தேவஸ்தானம் இப்பாகவதப் பெருநூலை அச்சிட்டு வெளியிட்டுள்ளது. வைணர்கள் போற்றிப் புகழும் வண்ணம் இந்நூல் மலிவுப் பதிப்பாக 1949 ஆம் ஆண்டு வெளி வந்துள்ளது.

பாகவதத்தில் பகவான் கிருஷ்ணனின் லீலா விநோதங்கள் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளன. திருமாலின் திருவவதாரங்களும் சிறப்பாகக் குழந்தைப் பருவக் கண்ணனின் திருவிளையாடல்களும பலவாறு பேசப்படுகின்றன. துஷ்ட துர்குணங்களின் வடிவமாக அமைந்துள்ள அசுரர்களின் அழிவை எல்லாம் மிகவும் அழகான கவிதையில் கற்பனை நயத்துடன் எடுத்துக் காட்டுகிறார் செவ்வைச் சூடுவார். எல்லாவற்றிற்கும் மேலான இறைவனின் குணப்பாடுகளைப் பலவாறு புகழ்ந்து கூறும் கவிஞர் வைணவத்தில் ஆழ்ந்த பற்றும் அசையாத நம்பிக்கையும் கொண்டவர் என்பது அவர்தம் சொல்லாற்றலாற் புரிகிறது.

''நினது மாயை
வளைத்திடப் பட்டோா நின்னை மதிப்
பரே மூவராக
உளத்தெளி வுற்றோர் பார்ப்ப
ருன்னைமற் றொருவ னென்றே.''
—செ. சூ. பாகவதம் பாடல் 2676.

'இறைவன் ஒருவனே' என்னும் கருத்தை மேற்கண்ட வரிகளில் விளக்குகின்றார் மாதவபண்டிதரெனும் செவ்வைச் சூடுவார். அவனருளின்றி வீடு பேறு என்பது எளிதல்ல என்பதனைக் கீழ்வரும் வரிகளில் காட்டுகிறார்.

'அரவிற் கிடந்த புயலன்றி
யளிப் பாரில்லை தனிவீடு'
—செ. சூ. பாகவதம் பாடல் 3377.

அரவணையிற் பள்ளி கொண்டுள்ள திருமாலைத் தவிர வேறு யாவராலும் அளிக்க முடியாதது வீடு பேறு என்று துணிவாகக் கூறும் கவிஞரின் வைணவப் பற்றைச் சொல்லவும் வேண்டுமோ! பாமர மக்களும் சிறிது கற்றோரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிய இனிய தமிழ்ப் பாக்களால் பாகவதத்தை இயற்றி மக்களை நல்வழிப்படுத்தும் பெரியோர் தம் நற்பணிக்கு இணை ஏதுமில்லை.

இறைவன் எங்கும் நிறைந்த பரம்பொருள். இதனையே தாயுமானவரும்,

பார்க்கு மிடமெங்கு மொரு நீக்கமற
நிறைகின்ற
பரிபூரணனந்தமே —என்றும்
இகபர மிரண்டிலும் உயிர்க்கு உயிராக
எங்கும் நிறைகின்ற பொருளே
—என்றும்
அண்ட பகிரண்டமும் அடங்கவொரு
நிறைவாகி
ஆனந்தமான பரமே —என்றும்

பலவாறகப் பாடிப் பரவுவதைக் காணலாம். இதற்கெல்லாம் விளக்கம் தந்தாற்போல் திருவாதவூரடிகளும் இறைவனின் திருவுருவத்தைப் படம் பிடித்துக் காட்டும் பாங்கினைக் காண்கிறோம்.

''ஐயாவென ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே'' என்பர். ஓங்கி, ஆழ்ந்து, அகன்ற, நுண்மையானவன் இறைவன். இப்படிப்பட்ட உருவத்தை எவராலும் காட்ட முடியுமா என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

இங்ஙனம் ஞானியர்களுக்கு மட்டுமே புரியும் ஒரு புதிரைப் பாமரரும் அறிந்து, உணர்ந்துய்யும் வணணம் ஆக்கித் தந்தார்கள் நமது சமயப் பெரியார்கள். அவர்களுக்கு என்ன கைம்மாறு செய்ய வல்லோம்?

இத்தகு ஓங்கி-உயாந்து, ஆழ்ந்து, அகன்ற, நுண்ணியனுகிய கண்ண பெருமானைக் கற்பார்தம் கைக்கும் கண்ணுக்கும் எட்டுமாறு காட்டுகிறார் நம் அரும்பெருங் கவிஞர் வேம்பத்தூார் செவ்வைச் சூடுவார் தம் பரம பாகவதத்தில். இந்நூலைக் கற்பதே அவர்க்கு நாம் செய்யும் கைம்மாறு ஆகும்.

கண்ணபிரான் நாமம் போற்றி!
கண்கண்ட தெய்வம் போற்றி!



## அறிவிப்பு

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகள் புகைப்படங்கள் ஆகியவற்றிற்கு எந்தவிதமான சன்மானமும் வழங்கப் படமாட்டாது.

—தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

அமைவதால் இத்தகையோர் மேலான பிறவியர் ஆகின்றனர். அவர்களும் நிச்சயமாக எந்தவித ஐயமும் இன்றி இறைவனது அருளுக்குப் பாத்திரரா கின்றனர்.

இந்த இடத்தில் பகவான இந்த உலகத்தின் தன்மை பற்றி ஒரு எச்சரிக்கை விடுக்கிறார். '**अनित्यं असुखं लोकं इमं प्राप्य भजस्व मां**'—நிலையற்றதும் துன்பம் நிறைந்ததுமாகிய இந்த உலகத்தை அடைந்த அர்ஜுனா! நீ என்னை வழிபடுவாயாக! என்கிறார். இந்தப் பிறவி நமக்கு வந்து வாய்க்கு முன் நாம் எங்கே எப்படி இருந் தோமோ, அது நமக்குத் தெரியாது. சரி, இந்தப் பிறவிக்குப் பின்னர் நாம் எங்கே எப்படி இருக்கப் போகிறோ மோ, அதுவும் நமக்குத் தெரியாது. இடையிலே வந்து வாய்த்தது இந்தப் பிறவி இவ்வுலகத்தில். எனவே இது நமது சாஸ்வதமான இடம் அல்ல. ஆனால் நாம் இந்த உலகத்தைத்தான் நமது நிரந்தர வாசஸ்தலமாகக் கருதி அதில் அபரிமிதமான பற்று வைக் கிறோம். 'அநித்தியம்'. 'அஸுகம்' என்ற இரண்டு அடை மொழிகளை இந்த உலகிற்குப் பகவான் அளிக் கிறார்.

இந்த உலகிற்கு உள்ள பெருமை என்ன? இது நிலையற்றது, துக்க மய மானது என்பது தான் அதன் பெருமை. இதையே தான் வள்ளு வர், 'நெடுநல் உளனொருவன் இன் றில்லை என்னும் பெருமை படைத்து இவ்வுலகு' என்றார். இந்த உலகத் தில் எவரும் சாசுவதம் இல்லை, எது வும் சாஸ்வதம் அல்ல. மாறிக் கொணடே இருப்பது தான இயற்கை யின் நியதி. எனவே இத்தகைய உலகில் நாம் நிலையான இன்பத்தை எதிர்பார்க்கின்றோம். அது எப்படிக் கிட்டும்? எனவே ஏமாந்து போகி றோம். எலும்பைக் கடித்து அதனால் தன் வாயிலிலிருந்து ஒழுகும் ரத் தத்தை எலும்பிலிருந்து வருவதாக எண்ணி மேலும் பலமாக அந்த எலும்பைக் கடித்து இன்னும் அதிகம் அவஸ்தைக்குள்ளாகும் நாயின் நிலை யில் தான் நம்மில் பெரும்பாலோர் இருக்கிறோம். ஆனால் நாம் இந்த உல கினுள வந்தாய் விட்டது. இதிலிருந்து எப்படியும் விடுபட்டாக வேணடும். அதறகு வழி! இறைவனை இடையறாது இறைஞ்சுவது தான். மனிதப் பிறவி பெறற்கரியது. தேவரும் கூட மீண் டும் மனிதராய்ப் பிறந்து தான் பெரு நிலையை அடைய வேண்டும். எனவே மனிதர்களாகிய நாம் இறைவனை அடைய முயல வேண்டும் என்கிறார் பகவான்.

மனிதராய்ப் பிறந்தவர் கடைத் தேற இருக்கும் ஒரே வழி பகவானைப் போற்றுவது தான். அது எவ்வாறு? பகவான் மிகத் தெளிவாகவும் சுருக்க மாகவும் கூறுகிறா. அதுவே இந்த அததியாயத்தின கடைசி சுலோகமாக அமைகிறது.

மன்மனா பவ மத் பக்தோ
மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாமேவைஷ்யஸி யுக்த்வைவம்
ஆத்மானம் மத் பராயண: ||

'மனதை என்னிடத்து வைத்து, என் பால் பக்தி பணணி, எனக்கு யாகம் செய்து, என்னை வணங்கு. என்னையே குறியாகக் கொண்டு உள்ளத்தை உறுதிப்படுத்தி என்னையே அடை வாயாக.'

பக்தி யோகத்தின் சாரமாக இந்த சுலோகம அமைகிறது. எடுத்த எடுப்பி லேயே பகவான, 'மனமனாபவ'—அதா வது 'மனத்தை எனனிடம் வை' என் கிறார். இதில் ஒரு பெரிய தத்துவம் அடங்கியுள்ளது. நாம் எந்தத்தொழில் செய்தாலும், எந்த நிலையில் இருந் தாலும், மனத்தை யாணடும் இறை வனிடத்திலேயே லயித்திருக்கச் செய்துவிடுவோமேயாகில் நாம் பண் ணும் அனைத்தும் யோகமாக மாறி அமைகிறது. நாம் மிகச் சிறந்த பக்த ராக மாறி அமைகிறோம். புலனகள் தீயதைச் செய்து கொணடிருக்க, மனம் இறைவனிடம் லயித்தால் என்ன பலன் கிட்டுமோ என்று அன்பர் ஒருவர் ஐயத்தை கிளப்பலாம். இறைவனிடம் மனம் லயித்த பின்னர், புலன்களும் தீயதைத் தவிர்த்து நல்லதிலேயே பதிநது நிற்கும்.

நமது சிந்தனை, சொல், செயல் அனைத்தும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப்பட வேண்டும். செய்யும் செயல்கள் யாவும் இறைவனுக்கே அர்ப்பணிக்கப் படுவதானது சிறந்த யாகமாக அமைகிறது. சிந்தனை, சொல், செயலில் ஒன்றுபட்டு நிற் பவர்கள் பக்தி பண்ணுபவர்கள் எங் கும் எதிலும் இறைவனைக் காணும் திறம் படைத்தவர்களாகினறனர். அநதப் பெருநிலையில் அவாகளது வாழ்வில் பெரு மாற்றம் நிகழ்கிறது. மல்லிகை மலர் இருந்த இடத்தில் இருந்தவாறே நறுமணத்தை எங் கும் பரப்புவது போல, அவர்களும் எங்கும் தெய்வீக மணத்தைப் பரப்பு கின்றனர். எவருக்கு எதைக் கொடுத தாலும் இதை ஏற்றுக் கொள்பவர் இறைவனே என்று எண்ணி 'நான கொடையாளி' என்ற எணணத்தைத தவிர்த்துச் செய்யும் தானம் ஒரு வனுக்கு சிறந்த மேல் நிலையை அளிக கிறது.

'வாழ்வின் இலட்சியம் இறைவனை அடைவதே என்பதை உணர்ந்து சதா சர்வ காலம் பக்தியில் திளைதது நிற் பவர்களுக்கு இனபமே எந்நாளும் துன்பமில்லை. அவர்கள் என்னை அடை கின்றனர்,' என்று திரும்பத் திரும்ப பகவான் உறுதி மொழி அளிப்பது அரை குறையான பக்தியில் கிடநதுழ லும் நமக்கு நல்லறிவைப் புகட்டத் தான் என்பதை நாம் உணர வேண்டும்.

(தொடரும்)

தொடர் கட்டுரை

# திருவேங்கடவனின் திருவருள் தேவி



திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

தன்னுடைய அபராதங்களையெல்லாம் தயா தேவியின் உணவாக்கி, தூய்மையுணர்ச்சி பெற்ற இக்கவிஞனுள்ளத்தே திருமலைக் காட்சி மலர்கின்றது.

மலைச்சார்புகளில் கொந்தளித்தோடும் தூய நீரருவிகளும் வண்ண ஜாலங்கள் வீச ஆங்காங்கு பெருகும் நீர்வீழ்ச்சிகளும் இவருள்ளத்தை ஈர்க்கின்றன.

மக்கள் புறவழுக்குகளோடு உள்ளத் தழுக்குகளையும் ஒருங்கே நோக்கி மறுமையின் குறுக்கீடுகளான பாப ராசிகளையும் கழுவவல்ல, பாபவிநாசினிகளான இந்நீர்ப் பெருக்குகள் திருவேங்கடேவன் தூய அருள் பிரவாஹங்களே என்று நிர்ணயிக்கின்றான் கவிஞன.

''வ்ருஷகிரிகடகேஷு வ்யஞ்ஜயத்ஸு ப்ரதீதைः
மதுமதந தயே த்வாம் வாரிதாரா விசேஷைः ''.

''திருவேங்கடமலைச் சாரலிலே புகழ் பெற்ற நீரருவிகள் உன்னையல்லவா நினைவூட்டுகின்றன '' என்று வேங்கடவன் திருவருள் தேவியை நீர் வீழ்ச்சியில் காண்கிறான்:

உடனே அவன் மனம் அம்மலைத் தாழ்வரைகளில் எங்கேனும், ஓர் குடிசை வேய்ந்து, தன் எஞ்சிய வாழ் நாட்களைக் கழிக்க அவாவுகின்றது. ஆனால் தன்னுடைய அப்போதைய உடல் நிலை அதற்கேற்றவாறு இல்லாததை உணர்ந்தானோ என்னவோ!

அன்று திருவரங்கனிடம் ஆழ்வார் முறையிட்ட சொற்கள் அவன் நினைவுக்கு வருகின்றன.

எய்ப்பெனை வந்து நலியும்போது
யானுன்னை நினைக்கமாட்டேன்—
ஆதலின்
அப்போதைக் கிப்போதே சொல்லி
வைத்தேன்
அரங்கத்தரவணைப் பள்ளியானே''

'ஆம், தளர்ச்சியில்லா உடலும் சோர்வுபடா உள்ளமும் இருக்கும் இளமையிலேயே யல்லவா எனக்கு இவ்வாசை தோன்றியிருக்கவேண்டும்' என்று பெருமூச்செறிகின்றான்!

'' மாலினி '' என்ற அழகிய வடமொழிப்பாவிலக்கணத்தில் பாடும் பதிகத்தின் முதல் ஸ்லோகத்தில் இவ்வாறெல்லாம் எண்ணமிடுகின்றான் கவிஞன். அச்சுலோகத்தின் முழுக் கருத்தையும் ஸ்லோகத்தையும் ஈண்டு காணபோம்.

''ஏ, தயா தேவியே, இவ்வுடல் நல்ல ஆரோக்யத்துடன் இருக்கும் போதே உன் திருமலைக்கு வரவேண்டும். இந்திரியங்கள தளர்ந்து, வலி குன்றி மூச்சுந் தடுமாறும் நிலையில் உன மலை மேல் ஏறத்தான் முடியுமா? அப்படி ஒரு வேளை கிட்டிவிட்டாலும் உன்னருள் விளையாட்டுக்களை ரஸிக்கத் தான் முடியுமா! ஆதலின் புண்ணிய தீர்த்தங்கள் இடையறாது பெருகும் திருமலையின் தாழ்வரையிலே எனக்குத தளர்வு ஏற்படும் முன் சில நாட்களாவது என்னை ஈடுபடுத்துவாயாக'' எனகின்றார்.

இதோ அந்த ஸ்லோகம்;

''அசிதில கரணேஸ்மித் அக்ஷதச்வாஸ
வருததௌ
வபுஷி கமநயோக்யே வாஸம்
ஆஸாதயேயம்
வ்ருஷகிரிகடகேஷு வ்யஞ்ஜயத்ஸு
ப்ரதீதைः
மதுமதந தயே த்வாம் வாரிதாரா
விசேஷைः''

இனி திருப்பதி எம்பிரான் உள்ளத்தே உருவாகும் இத்தயா தேவியின் செயல்களை நாடக பாணியில் வெகு அழகாகப் பேசுகின்றான் மூன்று ஸ்லோகங்களால். வைணவ சித்தாந்த




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

திரு. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

## ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) டிக்கெட் ஒன்று | | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) டிக்கெட் ஒன்று | | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில, இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

மான விசிஷ்டாத்வைதத்தின் தனிப்பட்ட பிரபத்தி இலக்கண விளக்கங்களாகவே இதனைப் பேசுவர் பெரியோர்.

''இம்மையில் தேவைப்படும் சாதாரணமான நற்குணங்கள் சிறிதேனும் என்னிடமில்லை. போகட்டும்! மறுமைக்கு வேண்டிய சிந்தனைகளாவது உண்டா! ''இவ்வான்மா என்றுமே எம்பெருமான் திருவுள்ளத்திற்கேற்ப இயங்கும் தாஸன்'' என்றெல்லாம் பேசப்படும் விஷயங்களைக் கேட்டு சிந்தித்துச் சிறிதளவேனும் தெளிவு பெற்றவனா? அதுவுமில்லை.

அப்படியிருக்கையில் என்னையும் காப்பாற்ற வேண்டும் என்ற அவன் திருவுள்ளத்தில் பிறக்கின்றாய்.

அவ்வளவுதான்.

என்னைக் காப்பாற்ற என்னென்னவெல்லாம் பேசி நீ அப்பெருமானை உன் வசப்படுத்திவிடுகிறாயம்மா! அவனுடன் எப்பொழுதும் பிரியாது வாசம் செய்யும் இலக்குமியும் பூதேவியும் கூடத்தான் என்னைக் காக்க முயன்றனர். என்னுடைய இழிவான நிலையைக் கண்டு திருவேங்கடவன் அவர்களையும் பொருட்படுத்தாது என் மீது வெகுண்டான்.

ஆனால் உன்னைக் கண்டவுடன் (அவனுள்ளத்தில் நீ பிறந்தவுடன்) அவன் உனக்கு வசப்பட்டுவிடுகின்றான் உன் முயற்சியில் நீ ஏதோ ஜாலம் செய்து அவனை வசப்படுத்தி வெற்றி கண்டு விடுகின்றாய். இம்முயற்சியில் தோல்வியுற்ற பெரிய பிராட்டி, பூமி பிராட்டியும் கூடவல்லவா உன்னைப் பாராட்டி மகிழ்கின்றார்கள்.

''அவிதித நிஜயோகக்ஷேமம் ஆத்மா
நபிகளும
குணலவரஹிதம மாமகோபதுகாமா
தயே த்வம்
பரவதி சதுரைஸதே விபரமை:
ஸ்ரீநிவாஸே
பஹுமதிமநபாயாம் விநதஸி
ஸ்ரீதரண்யோ:

இதற்கடுத்த ஸ்லோகத்தை ஓர் நீதி விசாரணைக கூடமாக அமைத்து அதில் தயா தேவி செயலபடடு வேங்கடவன் திருவடிகளையடையும் சேதனரை எவ்வாறு காப்பாற்றுகின்றுள் என்பதைப் பேசுகின்றுர்.

இதனை நம் மனக்கண்முன் காட்சி படுத்திக் காண்போம்.

அவரவர்கள் செய்த புண்ணிய பாபங்களுக்கேற்ப நீதி அருள்பவன் வேங்கடவன். அவன் பாரபட்சமற்றவன். நேர்மை மாறுதவன். கிட்டுதற்கு எளியவன. தன் பிராட்டிமார்களோடு திருமலையில் நின்று நீதி வழங்குகின்றுன்.

தன்னை வழிபடும் சேதனனைக் காண்கின்றுன்.

வழிபடும் சேதனனும் நடுங்குகின்றுன். இருவர் உள்ளங்களிலும் ஓர் மானசிக சம்பாஷணை உருவாகிறது.

''கணக்கற்ற பாபங்களைச் செய்துவிட்டு என் காலடியில் வீழ்ந்தால் மட்டும் உன்னைக் காப்பாற்றிவிட முடியுமா ? போ ! என் முன நிலலாதே! உன பாபங்களை நீ அனுபவித்தேயாக வேண்டும்.''

கருணையை எதிர் நோககி நிறகும் சேதனன கண்ணீரமல்க தொணடையடைப்பட்டு,

''ஸ்வாமீ, எங்கு போவது'' ?

இறைவன் முகம் சிவக்கினறது. தன் பக்கலிலுள்ள பிராட்டியைப் பார்க்கின்றுன். தாயுள்ளம் படைத்த அவளும் தீன நிலையில் காணும் சேதனனைப் பார்த்து பரிதாபப்படுகிறுள்.

இந்நிலையில்தான் இறைவனுளளத்திலும் சிறிதளவு கருணையுணர்சசி பளிச்சிடுகின்றது. மறுகணம் தயா தேவி உருவாய்விடுகின்றுள்.

அவள் தோனறும அழகிலும அவள் தீனர்களான சேதனர்களுக்காக எமபிரானுடன் வாதாடும் போக்கிலும ஸ்ரீனிவாஸன் மயங்கிவிடுகின்றன போலும்.

என்ன வாதாடுகிறுள்?

எமபெருமான இவனுக்குப் பரிந்து பேச வநதுவிட்டாயே! இவன் எவ்வளவு பாபங்கள் செய்தவன் தெரியுமா?

தயாதேவி; தெரியும். அதனுல்தான. ஓடிவநது உங்கள் காலில்விழுகின்றுன. பாபமே செய்யாதவன ஏன்வரப் போகின்றுன்.

பெருமான் : என்ன அப்படிப் பேசிவிட்டாய். பாபமே செய்யாதவன் ..

தயா : ஏது ஸ்வாமி. இக்கலியில ஒருவனகூட உமக்குக் கிடைக்கமாட்டான்.

பெருமான : அப்படியானுல் பாபிகளையும் நான் ரக்ஷிக்க வேண்டுமென்கிருயா?

தயா : நான் சொலலவிலலை. நீங்களே சொன்னவை.

பெருமான : என்ன கொன்னேன்.

தயா : ராமாவதாரத்தில் விபீஷணன வந்தபோது ''ஸ்க்ருதேவப்ரபந்நாம தவாஸ்மீதிச யாசதே, அபயம் ஸர்வபூதாஞம் ததாமி. ஏதத் வ்ரதம் மம'' என்று மார் தட்டினீர். கிருஷ்ணுவதாரத்தில்,

''ஸர்வ தாமான் பரித்யஜய மா மேகம்
சரணம வ்ரஜ,
அஹம தவா ஸாவ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி, மாசுசஃ

என்று கர்ஜித்தீர். இப்பொழுது.. ..

பெருமான் : அப்படியானுல் உலகத்தில பாபிகள கூட...

தயா ; ஆம. யாவருமேதான். உம்மால் ரக்ஷிக்கப்படல் வேண்டும்.

பெருமாள : அப்பொழுது என் ரக்ஷகம் வ்யவஸ்த்தையற்றதாய் போய்விடும். ரக்ஷிப்பதற்கு ஏதாவது ஒரு சாக்காவது வேணடாமா ? இப்படி நீ சிபாரிசு செய்யும் எல்லோரையுமே நான் ரக்ஷித்துவிடுவதனுல் என்னை பக்ஷபாதி என்று உலகம் ஏசாதா ?

தயா : இதோ உங்கள் காலடியில் வீழ்கின்றுனே இந்த ஒரு காரணம போதாதா ?

இதற்கு மேல் ஸ்ரீனிவாஸனுல் ஒன்றும் பேச இயலவில்லை. தன் பக்கலிலுள்ள ஸ்ரீதேவி பூதேவிகளைப் பார்க்கினறுன. அவர்களும் ஓர் புன்முறுவலால் தயா தேவியை ஆமோதிக்கினறனர். எமபிரான் முகததிலும் ஓர் சோபையும மந்தஹாஸமும் தோன்றுகின்றது. சரணமடைந்த சேதனன் ரக்ஷிக்கப்பட்டுவிடுகின்றுன்.

இவ்வளவு விளக்கங்களுக்கு இந்த ஒரு ஸ்லோகத்தில் இடமுணடா என்று சிந்திக்கிறீர்களா ?

(ப்ரதிவதஸி நாயாதார்ஹம் பாபம நாம் மாமகானும்) 'என்னுடைய பாபங்களுக்கு ஏற்றவாறு வாதாடி'' என்ற சொற்களின் ஒலியே இவை. அன்றியும '' ப்ரகுணமநுவிதேயம் '' உயர்ந்த திருமந்திரமாகிய, '' திருவஷ்டாக்ஷரத்திற்கு வசப்பட்டவன் '' என்று எம்பெருமானைப் பேசுகின்றுன் கவி.

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில ப்ரபத்தி சாஸ்ததிரத்தின் அஸ்திவாரமே திருவஷ்டாக்ஷர மந்திரம். இக்கவி ஸாரவபௌமனே வேறோரிடத்தில் மநத்ரத்ரயங்களாகிய திருவஷ்டாக்ஷரம், த்வயம், சரம ஸ்லோகங்களை,

''மூன்றில் ஒரு மூனறும், மூவிரண்
டும், முநநானகும்
தோன்றத் தொலையும துயர்''

என்று பேசியுள்ளார்.

இனி ஸ்லோகத்தைப் படிப்போம்.

''பலவிதரண தக்ஷம் பக்ஷபாதா
நபிக்ஞம்
பரகுணமநுவிதேயம் ப்ராபயபுத்மா
ஸஹாயம்

மஹதி குண ஸமாஜே மாநபூர்வம்
தயே த்வம்
ப்ரதிவதஸி யதார்ஹம் பாப்மநாம்
மாமகாநாம்||

இப்படிக காப்பாற்றப்பட்ட சேத னன் சிந்திக்கின்றான். இப்படி ப்ரபத்தி என்ற ஓர் சீலமான உபாயத்தால் தனக்குக் கிடைத்த மாபெரும் லாபத்தை எண்ணுகின்றான்.

அவனவன் செய்த பாப புண்ணியங் களுக்கேற்ப அவனவன் பல பிறவிகள் எடுத்து அவைகளை அநுபவித்தேதீர்க்க வேண்டும் என்று சாமானிய சாஸ்திரங் கள் ''அவச்யமநு போக்தவயம் க்ருத கர்ம சுபா சுபம்'' என்று கூறி முடித்து விட்டன.

எண்ணற்ற பிறவிகளில் தான்செய்த கர்மாக்கள் மலைபோல் குவிந்துஎளன. அவை ''ஸஞ்சிதங்கள்'' எனப்படும். அதில் ஒரு சிறு பகுதியையே எடுத்துக் கொண்டு அனுபவித்துவிட இப்பிறவி எடுத்துள்ளேன். இது ''ப்ராரப்தம்'' எனப்படும். இப்பிறவியில் இப்ப்ரா ரப்தத்தை அனுபவிக்கும்போதே செய் யும் கர்மாக்கள் கணக்கற்றவை. இவை ''ஆகாமயம்'' எனப் பெயர் பெற்று, இனி அனுபவிக்க வேண்டிய ஸஞ்சிதங்களோடு மலை மலையாய் குவிந்து வருகின்றன.

இந்நிலையில் என் புண்ணிய பாப கர் மாக்களை நான் அனுபவித்தே தீர வேண்டும் எனபது நடக்கக்கூடியதா ? எத்தனை பிறவி எடுத்தாலும் முடி யுமா?

இல்லை ப்ராயசித்த, பஸ்சாத்தா பங்களால் குறைககக் கூடியவைகளா இவை ?

''தூயோமாய் வநது நாம் தூமலர்
தூவித் தொழுது
வாயினால பாடி, மனத்தினால்
சிநதிக்க''

அவனிடத்தில் தயா தேவி உதய மாவாள்.

அவ்விடத்து ஸ்ரீனிவாஸன் வாதாட முடியாது. பின்

''நம போய பிழையும (ஸஞ்சிதங்கள்)
புகுதருவான நின்றனவும
(ஆகாம்யங்களும்) தீயினில
தூசாகும்''

என்ற ஸ்ரீ ஆண்டாள் தேவியின் மன ஓட்டங்கள், இக் கவிஞனுள்ளத்தும் ஓடியே இந்த ஸ்லோகம் உருவாகி யிருக்க வேண்டும்.

நாம் நற்கதியடைய திருமலை எம் பிரானிடம பிறக்கும் தயை (க்ருபை) ஒன்றே காரணம். வேறு கர்ம ஞான பக்தி யோகாதிகள் காரணமாக மாட்டா என்று முடிவு கட்டுகிறான் இந்த ஸ்லோகத்தால்.
இதோ ஸ்லோகம்:

''அநுபவிதும் அகௌகம் நால
மாகாமிகால:
ப்ரசமயிதும் அசேஷம் நிஷ்க்ரியாபி:
ந சகயம்
ஸ்வயமிதி ஹிதயே த்வம் ஸ்வீகருத
ஸ்ரீநிவாஸா
சிதிலித பவபீதி: ச்ரேயஸே
ஜாயஸே ந:

''நாட்டில் நாம் படுவதெல்லாம் படாததற்காகவே அவன் பிறந்து படாதன படுகின்றான்'' என்று எம் பெருமான் அவதாரங்களை விளக்குவர் உரையாசிரியர்கள்.

ஆம்!

ஒப்பாரும் மிக்காருமில்லாத பரம் பொருள் ஒரு ராமனாய்ப் பிறநது ஒரு பெண்ணால் காட்டுக்குத் துரததப் பட்டு, மனைவியை இழந்து, வேறொரு வனுடனும் குரங்குகளுடனும் நட்பு கொணடு திணடாட வேணடுமா?

அல்லது ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில ஒருத்தி மகனாய், இடைச் சேரியில் மாடு கன்றுகள் மேய்த்து, இடைப் பெணகளால் பரிகசிக்கப் பட்டும் கட்டுணடும், திண்டாட வேண்டுமா? வளர்ந்த பிறகு தான் என்ன! சிசுபாலன் போனறவர்களிடம் நூற்றுக்கணக்கான இழிவுச் சொற் களுக்கு ஆட்படவேண்டுமா?

போகட்டும் மனிதப் பிறவி மட் டுமா கொண்டான்?

ஒரு மீனாகவும், ஆமையாகவும, நரங கலந்த சிங்கமாகவும், குட்டனாகவும், அல்லவா பலப்பல பிறப்புகளும் எடுத் தான்.

'ஏன்? எனில்' இது அவன லீலை (விளையாட்டு) என்று ஸம்பிரதாயம் பேசிவிடும். இப்படியெல்லாம் விளை யாடுபவனா திருவேங்கடவன.

இல்லவே இல்லை. அவன் திருவுள் ளத்தில் ''திருவருள் தேவி'' பிறக் கின்றாள். அவளுக்கு அடிமையாய்விடு கின்றான் வேங்கடவன. ''உலக மக் களின இனனலை உணரும் அன்னை யல்லா தயா தேவி! உலகத்தில் ஸாதுககளைக் காக்கவும் துஷ்டர்களை ஒடுக்கவும் ஸத்தர்மங்களை நிலைநாட்ட வும் இறைவனை உலகில் பிறககத தூணடுகின்றாள். அவள் தூண்டலி னால் தான் எத்தகைய இழிவையும் இன்னலையும் பொருட்படுத்தாது அவன் அடுத்தடுத்துப் பிறந்து உலகை நல்வழிப் படுத்துகினறான்.

எம்பிரானது கருணையினையே ஓர் தேவதையாக்கி இக்கவிஞன் அத்தயா தேவியை எப்படியெல்லாம் சித்தரிக் கின்றான் பாருங்கள்.

ஸ்லோகத்தின் கருத்து

''தன விளையாட்டு என்று போக்குக காட்டி தன்னையடையும் மக்களின் பிறவிப் பிணி நீக்கத்தான் பலபடியும் தயையினால் தூண்டப்பட்டே அவதரிக் கின்றான்.''

''அவதரண விசேஷ: ஆத்மலீலாப
தேசை:
அவமதிம் அனுகம்பே மநத
சிததேஷு விநதந
வ்ருஷப சிகரிநாத: தவந்நிதேசேந
நூநம
பஜதி சரணபாஜாம் பாவிநோ
ஜந்மபேதாந்''

(தொடரும்)

தொடர் கட்டுரை

# முப்புனித வதிகள்

(டாக்டர் ஜி. டி கோபாலகிருஷ்ண நாயுடு.)

பகுதி — 3

## காரைக்கால் அம்மையார்

மூவர் பெருமை:

இதுவரை முன அததியாயங்களில அனைவருககும அறிமுகமான ஔவை யாரைக கணடோம். ஆத்திசூடி, வாக்குணடாம், நல்வழி போன்ற நூல களை இயற்றிய ஔவையாரை தரிசித் தோம. விநாயகா அருளால் கயிலையை அடைநத ஔவையாரை அணிகிறோம். ஈசன எஙகும இருபபவன. அச்சத்தை யும அகங்காரத்தையும விட்டவர் களால்தான் அவனைக காண முடியும் என, ஔவையார் கூறிய விபரத்தை யும விளக்கிறோம.

பினபு கோதையின கதையையும கணடோம. 'மானிடவர்க்கு எனறு பேச்சுப்படில் வாழ்கில்லேன கண் டாய', என்று உரைத்த பெரியாழ் வாருடைய புததிரியைப் பாாத்தோம். இவளைச் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி யாகக் கணடுகொண்ட நிலையில ஆச்சரி யப்பட்டு, 'நமக்கு இனனும இவ்வளவு பரிபக்குவம் வரவிலலையே' என்று கருதி, 'இவள என்னை ஆணடாள்' என பூரிதத விஷ்ணு சிததன விபரத் தையும விளககிறோம.

இவ இரணடு பெண பகதாகளுடன், முனறும் பக்தராகிய புனிதவதி எனற காரைக்கால் அம்மையாரை இனிக் காண்போம. தமிழ் நாடடுப் புலவர் களிலே, பொது மக்கள் நெஞ்சிலே, இன்னும நிலையாக வாழகினற இம் மூவரும நம மனததிற்கினியவாகள்.

கயிலைக் காட்சி:

இமயவலலியாகிய பார்வதிதேவி யின் திருநோக்கு ஒரு பேய் மேல் பட்டது. அம்பிகை அதிசயித்து இறைவனை நோககி, ''தலையினால நடந்து இங்கு வருகின்ற எலும்புடம பின் அன்பு என்னே?'' என்று வினவு கிறாள்.

இவவமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணனிடம் சற்று அணுகுவோம். கண்ணனிடம் ஈடுபட்டு, மெய்ம்மறநது கிடக்கும் ஒருத்தியை, 'பேய்ப் பெண்ணே' என எழுப்புகிறாள, ஆணடாள். இப்படி அன்புமேலிட்டு ஒரு தோழியை எழுப் புவது, பின் காலத்தில் எழுந்த காரைக் கால அம்மையாரையே பார்த்துப் பகர்ந்ததுபோல இருக்கின்றது.

அம்பிகையை அன்புடன் நோக்கி, சிவபெருமான் சிரித்துக்கொண்டு சொல்லலுற்றார்: ''பார்வதி, தலை யினால் ஏறி வருகின்ற இவள் நம்மைப் பேணும் அம்மையே யாவள். இந்தப் பெருமைசேர் வடிவத்தினையும் வேண


இமய மலையில் இருக்கும் புனிதத் தலங்களான

பத்ரிநாத், கேதார்நாத், கங்கோத்ரி, யம்னோத்ரி

ஆகிய இடங்களுக்கு யாத்திரை மேற்கொள்ளும் போது திருமலை திருப்பதி தேவஸ்தானம், ஆந்திர ஆஷ்ரமத்தாரின் (ரிஷிகேஷ்)

ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலுக்கும் (திருப்பதி பாலாஜி)

ஸ்ரீ சந்திரமௌலீஸ்வர சுவாமி கோயிலுக்கும்

வருகை புரிந்து இறைவனின் தரிசனம் பெறுங்கள்.

தங்குவதற்கு எல்லா வசதிகளுடன் கூடிய சத்திரஙகள் உண்டு.




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ்,
கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம் சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன் கோயில் வீதி.
19—வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வனப்பட்டரை வீதி,
தெப்பக்குளம்.
திருச்சி-2

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட ராமய்யா, M.A., B.O.L,.,B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம.

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏகஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள் [வீதி,
தஞ்சாவூர்.

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல்,
கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. வி. திருவேங்கடம்,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல் மர்ச்சண்ட,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்தரதுர்க்கா.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

## எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. என். வாசுதேவ பிரபு,
10-58, அமராவதி,
கொச்சின்-1.

திரு. ஏ. ஸ்ரீநிவாஸாசார்யா,
5-5-34 சிவாலயம் வீதி,
கரீம் நகர். ஆ. பி.

திரு. வை. முகுந்தராவ்,
பிளாக் நெ. 10-391,
மங்களவார் பேட், பூனா-1.

திரு. என். வி. சாரி,
13. வடக்கு ஈஸ்வரன் கோயில் [தெரு,
ஈரோடு-1.

திரு.இ. எஸ். வி. ஜகன்னாத ராவ்,
டெலிபோன் ஆபரேட்டர்,
எஸ். இ. ரயில்வே, பிலாய்-3.

விஜயா ஏஜன்ஸீஸ்,
633, ஜே. பஜார்,
கரூர், திருச்சி மாவட்டம்.

ஸ்ரீமதி. ஜி. ராஜேஸ்வரி,
32, பிராமணர் வீதி,
நாடுபேட், குடியாத்தம்.

திரு. கே. சேஷாத்ரி,
1, தாதம் வீதி,
ஸ்ரீரங்கம் - 620006.

திரு. கணபதிராம் & கோ.,
68/1, சங்கரன் கிணர் தெருவு,
விருதுநகர்—626001.

மேற்குறிப்பிட்ட இடங்களல்லாது, மற்றைய நகரங்களுக்கு 'ஸப்தகிரி' ஏஜெண்ட்டுகள் தேவை. விற்பனையில் 25% கமிஷன் வழங்கப்படும். மேலும், ஏஜெண்ட்டுகள் இல்லாத இடத்திலிருந்து வரும் குறைந்தபட்சம் 5 பிரதிகள் அல்லது அதற்கு மேற்பட்ட பத்திரிகை சரக்காணைகளுக்கும் (Bulk orders) மேற்படி கமிஷன் தரப்படும்.


டிப் பெற்றுக் கொண்டனள்,'' என்றருளினார். அப்போது அப்பேயுருவம் அருகில் அணைய, பரமசிவன் ''அம்மையே'' என்ற மொழியினை உலகமெல்லாம் அறிய அருளினன். இப்பேய்ப் பெண்ணே, காரைக்கால் அம்மையார் என்றும் புனிதவதி என்றும் அழைக்கப்படுவர்.

இவ்வகையில் சேக்கிழார் செப்புகிறார்:

''..............................பின்னை
யருகுவந் தணைய நோக்கி, ''யம்
மையே'' யென்னுஞ்செம்மை யொரு
மொழி யுலக மெல்லா முய்யவே
யருளிச் செய்தார்''.

விளக்கம்:

அம்மை என்பது செம்மை செய்யும் ஒரு மொழி என்பது. சிவத்தன்மையை ஆக்கிக் கொடுக்கும் சிறந்த சாதனமாகிய மொழி.

''அம்மையே'' என்ற அன்புப் பெயரைக் கேட்டதுதான் தாமதம், ''அப்பா'' என்று அலறி. இறைவன் திருவடிகளில் வீழ்ந்தாள், புனிதவதி. சேக்கிழார் உருக்கத்துடன் இந்நிலையை வர்ணிக்கிறார்;

'' அங்கண'ணமம்மையே!' யென்
றருள் செய,'வப்பா' வென்று
பங்கயச் செம்பொற் பாதம்
பணிந்து வீழ்ந்தெழுந்தார்
தம்மைச,''

இறைவன் ''அம்மையே'' என்று அருளிச் செய்ய, ''அப்பா'' என்று ஆர்வத்துடன், தாமரைப் போன்று அழகிய பொன் போன்ற பாதங்களில் வீழ்ந்தாள். இறைவன் அம்மையைப் பார்த்து, 'குழந்தையே, இக் கஷ்டப்பட்டு காடு கடந்து, வந்த நோக்கம் யாது?' என வினவ, அம்மையார் கூறலுற்றாள்: ''என்றும் மாறாத அன்பு வேண்டும்; பிறவாமை வேண்டும்; அன்றி, மீண்டும் பிறப்பு உளதாயின், உன்னை என்றும் மறவாமை வேண்டும்; இன்னும், நீ ஆடுகின்ற போது, உன் கூத்தாட்டத்தைக் கண்டு நான் மகிழ்ந்து பாடிக்கொண்டே உன் திருவடியின் கீழ் இருத்தல்வேண்டும்'', என்று மனமுருகிக் கெஞ்சினாள், இறைவன்பால், நம் சிவநேசச் செல்வி.

அம்மை சொல்வதை உற்றுக் கேட்கும்படி சேக்கிழார் நமக்கு ஞாபகப் படுத்துகிறார்,

''இறவாத வின்ப வன்பு வேண்டிப்
பின் வேண்டுகின்றார்
'பிறவாமை வேண்டு; மீண்டும் பிறப்
புண்டே லுன்னை யென்றும்
மறவாமை வேண்டு: மின்னும்
வேண்டு நான் மகிழ்ந்து பாடி
யறவாநீ யாடும் போதுன் னடியின்கீ
ழிருக்க' வென்றார்''.

விளக்கம்: அறவா=அறம் இறைவனது உருவம்; அறம் என்பது எல்லா உயிர்கள் மேல் வைத்த அருள்.

இறுதியில் எதுவரினும், உன் திருவடிக் கீழ் என்றும் நீங்காது பாடிக் கொண்டே இருக்க உன் வரம் வேண்டும்.

பின்பு பரமசிவன் பரவசமடைந்து பரிந்துப் பகர்ந்தான்: ''உன் கோரிக்கை வெற்றி பெருக; தென் றிசையிலே நீடும் வாழ்வினைத்தரும் பழையனூர்த் திருவாலங்காட்டில் நாம் ஆடும் பெருநடனத்தை நீ கண்டு ஆனந்தத்துடன் எப்போதும் பாடிக் கொண்டிருப்பாயாக'' என்றருளிச் செய்தனன். (தொடரும்)

# இராம மந்திரம்

முன் வினைப்பயனுக இப்பிறப்பில் யாதொரு சுகமும் இன்றி அல்லல் பட்டு, மறு பிறப்பிலாவது சகல சுகமும் உண்டாக வேண்டும் என்று கோருபவரும், இப்பிறப்பில் சகல சுகங்களையும் அனுபவித்து, மறுபிறப்பிலும் இத்தகையதாக இருக்க வேண்டுமென்று விரும்புபவரும் ஸ்ரீ ராம பட்டாபிஷேகம் அமைந்த யுத்தகாண்டம் 131வது ஸர்க்கத்தை ஒரு மாத காலம் பாராயணம் செய்ய வேண்டும் என்று "அனுக்கிரஹ ஆழ்வார்கள்" கூறியிருக்கிருர்கள்.

வேதாந்திகளால் கொண்டாடப்படுவதும், தேவதைகள் வணங்குவதும், கேட்பவர்களின் பாவங்களை அழிப்பதும், கற்பக விருக்ஷம் போன்றதும், முக்தியளிக்கவல்லதும், வால்மீகி முனிவரால் இயற்றப்பட்ட ஆதி காவியமுமான ஸ்ரீராமாயணத்தைக் கேட்பவர்கள் அனைவரும் சகல சுகங்களும் பெற்று முடிவில் மோக்ஷமடைவார்கள் என்றும் கூறுகிருர்கள்.

ரா மா என்ற இரண்டு எழுத்துக்களைச் சிரத்தையுடன் எப்பொழுதும் நினைத்தால் "முக்தி" கிட்டும். கலியுகத்தில் குற்றங்கள் நிறைந்த மனிதர்களுக்கு 'ராமா ராமா' என்ற ஜபத்தைத் தவிர்த்து வேருெரு கர்மாவிலும் அதிகாரமில்லையென்றும் ஆழ்வார்கள் கூறியிருக்கிருர்கள்.

உலகில் உள்ள மனிதர்களில் ஒருவர் உள்ளம்போல் மற்ருெருவர் உள்ளம் இருப்பதில்லை. ஏனெனில் எண்ணங்களில் மாறுதல், கொள்கை வழிபாடு, நெறிகளிலுள்ள செயல்களில் எல்லாம் வேறுபாடுகளும், வித்தியாசமும் உள்ளன. ஆனுல் ஒரு விதத்தில் மட்டும் வேறுபாடு இல்லை. எது என்று கேட்பீர்கள்? சிறுவன் முதல் முதியவர் வரையிலும். ஏழை முதல் பணக்காரர் வரையிலும் எல்லோரும் நாம் நினைத்த காரியம் ஜெயம் பெறவேண்டும் என்று நினைப்பார்கள். இந்த ஒரு விதத்தில் மட்டும் வேறுபாடுஇல்லை. ஆதலால் தான் மானிடர்கள் தோல்வியைத் தான் அடைகிருர்கள். காரணம் பின் வருமாறு:

காம்பில்லாத அகப்பைக் கொண்டு பாயாசத்தை எடுக்க முடியாது. அதாவது மனித அறிவும், முயற்சியும் அகப்பை போன்றது. தெய்வத் திருவருள் காம்பு போன்றது. இவ்விரண்டும் இல்லையெனில் முக்திகிடைக்காது.

ஜெயத்தின் சிகரமாகவும், ஒரு தோல்வியும் அறியாத அவதாரம்தான் "ராமாவதாரம்", கண்ணன் பதினெட்டு முறை ஜராசந்திரனிடம் தோல்வியடைந்தார் என்று கூறுகிருர்கள். ஆனுல் ராமாவதாரத்தில் ஸ்ரீ ராமனுக்கு தோல்வியே இல்லை. ஏனெனில் ஒரே கணையினுல் பகைவரைக் கொல்லும் ஆற்றல் ஸ்ரீராமபிரானிடம் அமைந்து இருக்கிறது என்று கூற வேண்டும். அதாவது ஸ்ரீ ராமருடைய கணை குறி தவறியதில்லை. குறிக்கு தக்கியது ராம சரம் என்ற பழமொழியும் கூறுவதுண்டு. இதன் சிறப்பு என்னவென்ருல் ஒருவர் விரிவாக பேசினுல் ஆஹா! ராமாயணம் போல் பேசுகிருர் என்று பலர் கூறுவதுண்டு.

ஸ்ரீ ராமஜெயம் வழக்கிலும் எழுதப் படுகிறது. அதாவது அகப்பகை, புறப்பகை என்ற இரு பகைகளை வெல்ல நினைப்பவர்கள் ஸ்ரீ ராமஜெயம், ஜெய ஜெய ராமா என்று பாராயணம் செய்ய வேண்டும் என்று கூறுவதுமுண்டு.

எனவே பாவத்தைப் போக்கவும், அது திரும்ப வர விடாமல் தடுக்கும் மந்திரம் "ஸ்ரீ ராம மந்திரம்" என்று கூறினுலும் அது மிகையாகாது. ஜெயத்தின் சிகரமும், தோல்வியே யறியாத அவதாரமும் இராமாவதாரம் ஆகும். ராமாவதாரத்தில் தோல்வி என்பது மருந்துக்கும் இல்லை. பகைவரை வெல்லும் ஆற்றல் ஸ்ரீராமபிரானிடம் அமைந்திருக்கிறது. அதற்கு காரணம் அவரிடமுள்ள அன்பும், சத்தியமும், ஒழுக்கமும் ஆகும். இதனுல் ராமரை தமிழ் முறைப்படி பார்த்தால் "இராமன்" என்று வரும். அதாவது இரா–இரவு; மன்–தலைவன்; இரவுக்கு அரசன்–சந்திரன். அதாவது சந்திரனைப்போல் குளிர்ந்து அடியார்களுக்கு அருள் புரியும் தெய்வம் ராமர்தான் என்றும் சொல்லுவதுண்டு.

---

திரு. ஆர். ஆர். ரெங்காராவ்,
மதுரை.

---

"பறவைக்கும் குரங்குக்கும் அருள் புரிந்தார்–கருணை
கடவுள் இராமர்–மனைவியைத் தீண்டிய
காகத்திற்கும் அருள் புரிந்தார் இராமர்."

அவருடைய பாதுகைகள் பாவத்தையும், சாபத்தையும் நீக்குமானுல் அவருடைய திருவடிக்கு எத்தனை பெருமையுண்டு என்பதை நாம் உணர வேண்டும்.

'ஸ்ரீராமஜெயம், ஜெய ஜெய ராமா' என்று பாராயணம் செய்வோர் வாழ்வில் நினைத்தகாரியம் ஜெயம்பெறுவர். அகமும் புறமும் வாய்மையுடன் இம் மந்திரத்தை உச்சரித்தோர் இகம், பரம் என்ற இரண்டையும் பெற்று இன்புறுவார்கள் என்பது உண்மை என்பதை அறிந்து ராம மந்திரத்தை எழுதியும், பாராயணம் செய்தும் வெற்றி பெறுவோமாக!"

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் நேபாள பிரதம மந்திரி

20-4-78 அன்று நேபாள நாட்டு பிரதம மந்திரி திரு. கீர்த்தி நிதி பிஸ்தா அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்தார். அன்று காலை அவரும் அவர் துணைவியாரும் தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்களால் வரவேற்கப்பட்டனர். ஒவ்வொரு வியாழக்கிழமைதோறும் நடத்தப்படும் 'பூலங்கி சேவையை' (அன்று இறைவன் பல வண்ண மலர்களால் மட்டுமே அலங்கரிக்கப்படுவார்) கண்டு களித்தனர். நேபாளத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயில் கட்டுதற்கு, அந் நாட்டின் உதவி என்றும் தி.தி. தேவஸ்தானத்திற்கு உண்டு என்று பிரதம மந்திரி அவர்கள் கூறினர்.

## திருமலைக்குச் சுற்றுலாப் பேருந்து வசதி:

அண்மையில் ஹைதராபாத்தில் ஆந்திர மாநில சுற்றுலாத் துறை அமைச்சர் திரு. ரோதா மேஸ்திரி அவர்கள் ஹைதராபாத்திலிருந்து திருமலைக்குச் செல்லக்கூடிய நேரடி சுற்றுலாப் பேருந்துப் போக்குவரத்தினைச் செயற்படுத்தினர். ஆந்திர மாநில சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தினால் நடத்தப்படும் இவ்விரைவு சொகுசு பேருந்து போக்கு வரத்தினால், யாத்திரிகர்கள் ஹைதராபாத்திலிருந்து நேரடியாக திருமலைக்கு வந்து, 'க்யூ'வில் நிற்காமல் உடனடியாக இறைவனைத் தரிசித்துத் திரும்பலாம். இப்பேருந்துகள் ஹைதராபாத்தில் கௌலிகூடா பேருந்து நிலையத்திலிருந்து செவ்வாய், வியாழன், சனி ஆகிய கிழமைகளில் மாலை 4 அளவில் புறப்படும்.

## பிரிவு வாழ்த்துரை விழா

திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகக் கல்லூரியின் தமிழ்மன்றத்தின் பிரிவு வாழ்த்துரை விழா 1-5-78 அன்று மாலை 5-30 மணி அளவில் கல்லூரியின் கலைக்கட்டடத்தில் நடைபெற்றது. இறைவணக்கப் பாடலுடனும், தமிழ்த்தாய் பாடலுடனும், இனிது துவங்கிய விழாவிற்கு வருகை புரிந்தோரை தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர். கு. தமோதரன் அவர்கள் வரவேற்றுப் பேசுகையில், தமிழ்த் துறையினரால் இதுவரை செயலாக்கப்பட்ட திட்டங்களையும், எதிர்காலத்தில்மேற்கொள்ளவிருக்கும் சிலவளர்ச்சித் திட்டங்களையும் பற்றி விரிவாக விளக்கிக் கூறினர். தொடர்ந்து பேசுகையில் அவர் தமிழ், தெலுங்கு இலக்கியங்களை ஒப்பிட்டுப் பல ஆராய்ச்சி நூல்கள் வெளிவரும் வகையில் தமிழ்த்துறை முயற்சிகள் பல எடுத்து வருகிறது என்றும், தமிழ் அறியா மற்றைய மொழியினர் தமிழ்மொழியினைக் கற்றுக்கொள்ளும்வகையில், பல்கலைக் கழகத்தில் தமிழில் சான்றிதழ் படிப்பு வசதியினை புகுத்துதல் அவசியம் என்றும் கூறினர்.

பின்னர் தமிழ்த் துறை மேற்கொண்ட பல பணிகளைப்பற்றிய அறிக்கையினை மன்றத்தின் செயலர் குமாரி. வசந்தா அவர்களும், தமிழ்த்துறை நடத்திய கருத்தரங்குகளைப் பற்றிய அறிக்கை ஒன்றினை துறையின் உயர் விரிவுரையாளர் டாக்டர். பொன். சௌரிராஜன் அவர்களும் வாசித்தனர்.

அடுத்து திருப்பதி ஸ்ரீ கோவிந்த ராஜசுவாமி கலைக்கல்லூரியின் தாவர இயல் பேராசிரியர் ஜி. லீலாகிருஷ்ணன் அவர்கள் விழாவிற்கு தன்னுடைய வாழ்த்துரைகளைத் தெரிவித்து தொடர்ந்து பேசுகையில், தமிழ் மாணவர்கள் தெலுங்கு மொழியைக் கற்பதன் அவசியத்தைக் குறிப்பிட்டு அரியதமிழ் இலக்கியக் கருத்துக்களைக் கொண்ட கையெழுத்துப் படிவொன்றினைத் தமிழ்த்துறை வெளியிட வேண்டும் என்றும் கூறினர்.

பின்னர் திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகக் கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குனர் பேராசிரியர். டாக்டர். எஸ். சங்கர நாராயணன் அவர்கள் தம்முடைய சிறப்புச் சொற்பொழிவில் ஆராய்ச்சி முறைகளை விளக்கிக் கூறுகையில் ஆராய்ச்சியாளருக்கு வேண்டிய அடிப்படைத் தகுதிகளைப்பற்றி விளக்கினர். நூல்களைப்பற்றி ஆராய்ச்சி செய்கையில் தீவிர அறிவியல் நுணுக்கங்களோடு தயக்கமின்றி, நல்லெண்ணத்துடன், மக்கள் பயன்பெறும் வகையில் புதிய பொருள்களைப்பற்றிய முழுக் குறிப்புக்களை ஒப்பு நோக்கி எழுதுதல் அவசியம் என்று பல உதாரணங்களுடன் விளக்கிப் பேசினர்.

விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகப் பொருளியல் அலுவலர் திரு. கே. கச்சபேஸ்வரன் அவர்கள் உரை யாற்றுகையில் தமிழ் இலக்கியத்தின் சிறப்பினைக் குறிப்பிட்டு மாணவர்களுக்கு அறிவுரைகள் வழங்கி வாழ்த்து தெரிவித்தார்.

டாக்டர். பொன். சௌரிராஜன் அவர்கள் நன்றி நவின்றார்.

## அடிக்கல் நாட்டு விழா

4-5-78 அன்று திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கலைக்கல்லூரி, ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கலைக்கல்லூரி விடுதி, ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஜூனியர் கல்லூரி, ஸ்ரீ பத்மாவதி

தொழிற் கல்லூரி, ஸ்ரீ வேங்கடேஸ்வரா பார்வையற்றோர் மற்றும் காது கேளாதோர் பள்ளி, குடியிருப்பு வசதியுடன் கூடிய உயர்நிலைப் பள்ளி ஆகியவற்றிற்கான கட்டடங்களுக்கு ஆந்திர மாநில முதலமைச்சர் டாக்டர். எம். சென்னு ரெட்டி அவர்கள் அடிக்கல் நாட்டினர். இதனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகைபுரிந்தோரை தி.தி. தேஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு அவர்கள் வரவேற்றுப் பேசுகையில், தி.தி. தேவஸ்தானம் எல்வாறு தன்னுடைய வருமானத்தின் பெரும்பகுதியை செலவழிக்கின்றது என்பதைப்பற்றியும், கல்வி மேம்பாட்டிற்காக தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள முயற்சிகள் பற்றியும் விளக்கிக் கூறி, தேவஸ்தானம் மேற்கொள்ளும் ஆக்கப்பூர்வமான திட்டங்களுக்கு உதவி புரிந்து வரும் தி. தி: தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுவிற்கு நன்றி தெரிவித்தார்.

விழாவிற்கு ஆந்திர மாநிலத்தின் இந்து அறநிலைய மற்றும் திட்டத் துறை அமைச்சர் திரு. வி. வெங்கட நாராயணு அவர்கள் தலைமை தாங்கினார்.

அடுத்து பேசிய முதலமைச்சர் தம் முரையில் இந்து சமயக் கல்வியின் அவசியத்தை வற்புறுத்தி, அக்கல்வியை சிறு வயதிலிருந்தே சமயப்பற்று மிக்க ஆசிரியர்களைக் கொண்டு மாணவர்களுக்குப் பயிற்றுதல் வேண்டும் என்றும், அம்முயற்சியில் தேவஸ்தானம் தன்னைத் தீவிரமாக்கிக் கொண்டு, தனக்கென்று ஒரு தனித்தன்மையை ஏற்படுத்திக் கொள்ளுதல் அவசியம் என்றும் கூறினார்.

இறுதியில் தி. தி: தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்கள் நன்றி நவின்றார்

## புதிய ஆந்திரா பேங்க் கிளை

திருப்பதியில் வட திருப்பதி வாழ் மக்கள் பயன்பெறும் வகையில், ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரி கட்டடத்தில் ஆந்திரா பேங்கின் புதிய கிளை அலுவலகம் ஒன்று 18-5-78 அன்று காலை 10 மணி அளவில், திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரியின் முதல்வர் டாக்டர். கே. எஸ். ஆர். தத்தா அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

## பெங்களூர் தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையம்

14-5-78 அன்று பெங்களூரில் ரூ. 14 இலட்சம் செலவில் கட்டப்பட்ட திருமண மண்டபத்துடன் கூடிய தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையம் ஒன்று ஆந்திர மாநில அறநிலைய அமைச்சர் திரு. வி. வெங்கட நாராயணு அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இவனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் வரவேற்றுப் பேசுகையில், இப்புதிய தகவலறிவிப்பு நிலையத்தில் பல்வேறு சமய நிகழ்ச்சிகள் நடத்தப்படும் என்றும், மேலும் பல கலை நிகழ்ச்சிகளை நடத்திக் கொள்ளும் வகையில், சுமார் 700 நபர்களுக்கான இடவசதி கொண்டு விளங்கும் திருமண மண்டபம் ஒரு சிறு தொகைக்கு வாடகைக்கு விடப்படும் என்றும் தெரிவித்தார். இவ்விழாவிற்கு ஆந்திர மாநில அறநிலையத் துறை ஆணையர் திரு. கே. புருஷோத்தம நாயுடு அவர்கள் தலைமை தாங்கினார். நிலையத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில் அமைச்சர் அவர்கள், ஸ்ரீவேங்கடேஸ்வரர் இந்திய நாட்டுக்கு மட்டுமின்றி அனைத்து நாடுகளுக்குரிய ஓர் தெய்வமாக விளங்கி, பல்வேறு நாடுகளிலிருந்து எண்ணற்ற யாத்திரிகர்களின் கவனத்தை ஈர்த்து வருகின்றார் என்று குறிப்பிட்டு, திறக்கப்பட்ட இப்புதிய நிலையம் பெங்களூர் நகர் வாழ் பொது மக்களுக்குப் பல வகைகளில் உதவியாக செயற்படும் என்றும் கூறினார். பின்னர் ஆந்திர கர்நாடக மாநிலங்களுக்கிடையே நிலவிவரும் வாழ்க்கை நடைமுறை ஒற்றுமைகளைக் குறிப்பிட்டு, இரு மாநிலத்தாரும் பயன்பெறும் வகையில் பொது மொழி ஒன்றினை உண்டாக்கும் பணியை குழு ஒன்றிற்கு ஒப்படைக்கப்பட்டுள்ளது என்றும் கூறினார். இவ்விழாவில், தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்கள் பங்கேற்றுப் பேசுகையில், விரைவில் ஒவ்வொரு மாநிலத் தலைநகரங்களிலும் இது போன்ற தகவலறிவிப்பு நிலையங்கள் திறக்கப்பட உள்ளன என்றும், இந்நிலையங்களில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயில்கள் கட்டப்படும் என்றும் கூறினார். இவ்விழாவில் பெங்களூர் வளர்ச்சிக் குழுவின் தலைவர் திரு. பி. டி. சோமண்ணு மற்றும் திரு. வி. ஆர். நாயுடு அவர்களும் பங்கேற்று உரையாற்றினர். திரு. எஸ். ஆர். ஸ்ரீநிவாசன் நன்றி நவின்றார்.



---

திருமலையில் நடத்தப்படும் கீழ்வரும் ஆர்ஜித சேவைகளுக்கான கட்டணங்கள் 1-6-78 முதல் உயர்த்தப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| திருப்பாவாடா | ரூ. 5000/- |
| சகஸ்ரகலசாபிஷேகம் | ரூ. 2500 - |

* * *

ரூ. 60/- செலுத்தி திருமலையில் நடத்தப்படும் பூலங்கி சேவைக்கு 1-6-78 முதற்கொண்டு இரண்டு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். 10 வயதுக்குள்ளான சிறுவர் சிறுமியர் இலவசமாக கிருஹஸ்தருடன் சேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

---

# ராசி பலன்

(1-6-78 முதல் 30-6-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph,D.
திருப்பதி.



## மேஷம் :

*[அசுவனி பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

ராகுவினால் பணவரவு; செவ்வாயினால் எதிரிகளால் அச்சம் அல்லது உடல்நலம்கெடல் அல்லது தன்மதிப்பு கெடல், தன் மக்கள் சம்பந்தப்பட்ட கவலைகளுக்குள்ளாதல்; சனியினால் சச்சரவுகள், பணநஷ்டம், தன் பிள்ளைகள் மற்றும் பெண்களால் கவலைகளுக்குள்ளாதல்; குருவினால் முயற்சிகள் தோல்வி அடைதல்; சுக்ரனால் நன்மை ஏற்படல், பணவரவு, மதிப்புயர்தல், புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப் பெறல், எதிரிகளை வெற்றி கொளல், புதனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது இகழ்ச்சிக்குள்ளாதல் ஆனால் இறுதி 15 நாட்களின் போது பணவரவு புதிய நட்புறவுகள் ஆனால் அதேசமயம் தண்டனை கிடைக்குமோ என்ற குற்ற உணர்வுக்குள்ளாதல்; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல் இறுதி 15 நாட்களின் போது பதவியுயர்தல், எதிரிகளை வெற்றி கொளல்.



## ரிஷபம் :

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினால் கவலைகள், சனியினால் பணநஷ்டம், உற்றார் உறவினருடன் பிரிவு; முயற்சிகள் தோல்வியடைதல்; செவ்வாயினால் வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் உடல் நலம் கெடல், தீய நண்பர்களால் துன்பங்கள் ஏற்படல்; குருவினால் பணவரவு மற்றும் வெற்றி; சுக்ரனாலும் பணவரவு, தானிய வகைகள் கிடைக்கப்பெறல், குடும்பத்தில் மகிழ்ச்சி, அலுவலக மதிப்புயர்தல், சூரியனாலும் புதனாலும் கெடுதிகள் ஏற்படல், சூரியனால் பிரயாணமும் அதனால் உடல்சோர்வும், பணநஷ்டம், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல், புதனால் எதிரிகளால் பணநஷ்டம், தவறான அறிவுரைகளை ஏற்றல், கருத்து வேறுபாடுகள், இடர்களுக்குள்ளாதல்.



## மிதுனம் :

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].*

ராகுவினால் எதிரிகள், சனியினால் பணவரவு, புதிய வாகன வாய்ப்பு, உடல்நலமேன்மை, குடும்பத்தில் மகிழ்ச்சி, செவ்வாயினால் தன் பிள்ளைகள் மூலம் பணவரவு, குருவினால் கேடுகள் ஏற்படல், பணநஷ்டம், அலுவலகக்கவலை, உடல்நலம் கெடல், சுக்ரனால் மனயமைதி, உடல்நலமேன்மை, சூரியனால் பணநஷ்டம், பிரயாணம், உடல்நலம் கெடல், புதனால் இகழ்ச்சிக்குள்ளாதல், எதிரிகள் ஏற்படல், உடல் நலம் கெடல்.



## கடகம் :

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

ராகுவினால் பணவரவு, செவ்வாயினாலும் சனியினாலும் அலுவலகக்கவலைகள், பணநஷ்டம், கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல், உடல்நலம் கெடல், குருவினால் பிரயாணமும் உடல் நலம் கெடலும்; சுக்ரனால் பயனேதுமில்லை; சூரியனாலும் புதனாலும் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது வெற்றி, மதிப்புயர்தல், பணவரவு, புதிய நட்புறவுகள், மகிழ்ச்சி.



## சிம்மம் :

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

ராகுவினால் பண நஷ்டம், சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு, பிரயாணம், பணநஷ்டம் குடும்பத்தில் சச்சரவுகள், அல்லது உறவினர்களால் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல், செவ்வாயினால் எப்போதும் தீமைகள் ஏற்படல், குருவினால் மிகுந்த பொருள் வரவு, சுக்ரனால் பணவரவு புதிய நண்பர்கள், புதிய ஆடை ஆபரணங்கள், ஆரோக்கியமான உணவு வகைகள் புதனாலும்சூரியனாலும் உடல் நலமேன்மை, பணவரவு, மதிப்புயர்தல், வெற்றி, குடும்பத்தில் மகிழ்ச்சி



## கன்னி :

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

ராகுவினால் கெடுதிகள் ஏற்படல் சனியினால் சோர்வுக் குள்ளாதல், செவ்வாயினால் மிகுந்த பொருள் நஷ்டம், இடையூறுகள், கண் சம்பந்தப்பட்ட வியாதியினால் அவதியுறல், மனைவிக்கு மனயமைதியின்மை, குருவினால் பண நஷ்டம், தன் மதிப்பு குறைதல், சுக்ரனால் கருத்து வேறுபாடுகள், அவமானப்பட நேரிடுதல், புதனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது இடையூறுகள், இறுதி 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி, சூரியனாலும் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணநஷ்டம், ஏமாற்றங்கள், உடல்நலம் கெடல் ஆனால் இறுதி 15 நாட்களின் போது வெற்றி.



## துலா :

[சித்துரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]

ராகுவினுல் பணநஷ்டம், சனியினுல் பணவரவு, கேளிக்கைகளுக்குள்ளாதல் செவ்வாயினுல் பணவரவும்வெற்றியும், குருவினுல் பணவரவு, மக்கட்பேறு, தன் பிள்ளைகளுக்கு நன்மை, வெற்றி, தானியவகைகள் கிடைக்கப்பெறல், மதிப்புயர்தல், சுக்ரனுல் பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், சமய நடவடிக்கைகளை மேற்கொளல், புதனுல் மாதத்தின் முதல்15நாட்களின் போது பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல், மக்கட்பேறு, தன் பிள்ளைகளுக்கு நன்மை,இறுதி 15 நாட்களின்போது இடையூறுகள் ஏற்படல், சூரியனுல் தீயன ஏற்படல், உடல்நலம் கெடல், பண நஷ்டம், ஏமாற்றங்கள் மனைவிக்கு மனயமைதியின்மை.



## விருச்சிகம் :

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]

ராகுவினுல் மகிழ்ச்சி, சனியினுல் பணநஷ்டம், மதிப்புக்கெடல், செவ்வாயினுல் பணவரவு, குருவினுல் உடல் நலம் கெடல், பிரயாணம், சுக்ரனுல் புதிய ஆடை ஆபரணங்கள், புதிய வீடு மகிழ்ச்சி, புதனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சச்சரவுகள், இறுதி 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி புதிய ஆடை ஆபரணங்கள், மக்கட்பேறு, அல்லது தன் பிள்ளைகளுக்கு நன்மை, சூரியனுல் பிரயாணம், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல், இறுதி 15 நாட்களின் போது உடல் நலமேன்மை. மனைவிக்கு மனயமைதியின்மை.



## தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

ராகுவினுல் கருது வேறுபாடுகள், சனியினுல் எதிரிகள் ஏற்படல், உடல் நலம் கெடல், தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல்; செவ்வாயினுல் பணவரவு மதிப்புக்கெடல், குருவினுல் பணவரவு மகிழ்ச்சி, சுக்ரனுல் சச்சரவுகள், இகழ்ச்சிக்குள்ளாதல், புதனுல் வெற்றி, மாதத்தின் முதல்15 நாட்களின்போது மதிப்புயர்தல், இறுதி 15 நாட்களின் போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல் சூரியனுல் உடல்நலமேன்மை மாதத்தின் முதல் 15 நாட்களின் போது எதிரிகளை வெற்றி கொளல் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது பிரயாணம், வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல்.



## மகரம் :

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].

ராகுவினுல் தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல், சனியினுல் உற்ருர் உறவினருடன் பிரிவு, செவ்வாயினுல் பணநஷ்டம், மதிப்புக்கெடல், துன்பங்கள் குருவினுல் மனயமைதி கெடல், சுக்ரனுல் இகழ்ச்சிக்குள்ளாதல், உடல்நலமின்மை, புதனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள், மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது வெற்றி தன் மதிப்பு உயர்தல், சூரியனுல் உடல்நலம் கெடல், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல்நல மேன்மை, எதிரிகளை வெற்றி கொளல்.



## கும்பம் :

[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]

ராகுவினுல் கவலைக்குள்ளாதல்; சனியினுல் பிரயாணம்; செவ்வாயினுல் மனைவியுடன் கருத்து வேறுபாடுகள், வயிறு அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல்; குருவினுல் மக்கட்பேறு அல்லது தன் பிள்ளைகளுக்கு நன்மை; புதிய வாகன வாய்ப்பு பணவரவு; புதிய வீடு, புதிய ஆடை ஆபரணங்கள், சுக்ரனுல் மக்கட்பேறு, பணவரவு, சான்ருேரால் தன் மதிப்புயர்தல், புதிய உறவுகள்; புதனுல் பணவரவு, மதிப்புயர்தல் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் கெடல், ஏமாற்றங்கள் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது உடல் நலம் பாதிக்கப்படுவதால் அல்லது எதிரிகளால் கவலைக்குள்ளாதல்.



## மீனம் :

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் உடல்நலமேன்மை, வெற்றி செவ்வாயினுல் பணவரவு, உடல்நலமேன்மை, குருவினுல் உறவினர்கள் மூலம் தொல்லைகள், மனயமைதி பறிபோதல், சுக்ரனுல் புதிய நல்ல நட்புறவுகள்; புதனுல் புதிய நண்பர்கள் ஆனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது தன்னுடைய செய்கையினுல் அலுவலகக் கவலைக்குள்ளாதல் இறுதி 15 நாட்களின் போது பணவரவு, தன் குடும்பத்தின் மதிப்புயர்தல், சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது மதிர்புயர்தல் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது உடல்நலம் கெடல், ஏமாற்றங்கள்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VENKATKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501




★

அண்மையில் திருப்பதியில், ரூ. 1. 6. கோடி செலவில் கட்டப்படவிருக்கும் தி. தி. தேவஸ்தான கல்வி நிறுவனங்களின் கட்டடங்களுக்கு ஆந்திரமாநில முதலமைச்சர் டாக்டர் எம். சென்னா ரெட்டி அவர்கள் அடிக்கல் நாட்டினர்.

★

---

அண்மையில் ஆந்திர மாநில ஆளுநர் திருமதி. சாரதா முகர்ஜி அவர்கள் திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்தில் புதிய அறுவைச் சிகிச்சை கூடத்தினைத் திறந்து வைத்தார்.



Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 4-15 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 4-15 | ,, | 4-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 4-30 | ,, | 5-00 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 5-00 | ,, | 5-30 | ,, | முதல் மணி, சாத்துமுறை |
| 5-30 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, | 2-வது அர்ச்சனை |
| மாலை | | | | (ஏகாந்தம்) 2-வது மணி |
| 1-30 | ,, | 7-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | இரவு கைங்கர்யம், |
| 8-30 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | | | | ஏகந்ாத சேவை (ஏகாந்தம்) |

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | சஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை |
| மாலை | | | | (ஏகாந்தம்) 2-வது மணி |
| 2-00 | ,, | 8-00 | இரவு | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியவைகள் |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 11-30 | | ஏகாந்த சேவை (ஏகாந்தம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி, திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை |
| 11-00 | ,, | 7-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | இரவு | சுத்தி முதலியவை |
| 7-30 | ,, | 9-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 | ,, | 11-30 | ,, | பூலங்கி (ஆர்ஜிதம்) |
| 11-30 | ,, | 11-45 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-45 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யங்கள் இரவு மணி |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

குறிப்பு : விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சி நிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.